உ

சிவமயம்

# சிவ வழிபாடு

## சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கைகள்

(பட விளக்கத்துடன்)

ஆக்கியோன்

அறநெறியண்ணல்

**கி. பழநியப்பனார்**

மதுரை

கொழும்பு, கொட்டாஞ்சேனை
அருள்மிகு வரதராஜப் பிள்ளையார் கோவில்
வெளியீடு

அன்பே சிவம்

உரிமை பதிவு:
முதற்பதிப்பு: தி.பி. 2026 மார்கழி
(1995 மார்கழி)

விலை: இலங்கை ரூபாய்: 100/-

ஓவியர்: அ. சந்திரஹாசன்

தயாரிப்பு: தெ. ஈஸ்வரன் பி.காம்.
க. சச்சிதானந்தன் எம்.ஏ., எம்.எஸ்ஸி.

ஒளி அச்சுக்கோப்பு, அச்சிடல்:
*காந்தளகம்*
4 முதல்மாடி ரகிசா கட்டடம்
834 அண்ணா சாலை
சென்னை 600 002. தொலைபேசி: 834 505.

*அன்பே சிவம்*

உ

# காணிக்கை

அருள்மிகு வரதராஜப் பிள்ளையார் அருளாணைக்கு இணங்கவும், திருவருள் கூட்டவும், கொட்டாஞ்சேனை வாழ் அடியவர்கள் பலரின் வேண்டுகோளுக்கு இணங்க வும், சைவ சிந்தாந்தக் கோட்பாடுகள் பற்றிய இந்த எளிமை யான, விளக்கப்படங்களுடன் கூடிய நூலை வெளியிட்டு, திருவெம்பாவை நாள்களில் பிள்ளையார் திருப்பாதங் களில் காணிக்கை யாக்குகிறோம்.

இந்த நூல், சைவ சமயத்தின் அடிப்படைகள் பற்றி விளக் கும் நூல். சிவ வழிபாடு பற்றிய அறிவு இது நாள்வரை பெறாதவர்களுக்கும் தொடக்க நூலாக அமையும். மாணவர் கள் விரும்பிப்படிக்கக் கூடிய வகையில் பெரிய எழுத்து களில் அச்சிடப் பெற்றுள்ளது.

நூலின் இறுதிப் பகுதியில் இணைக்கப்பெற்றுள்ள தோத் திரப் பாடல்கள் சிவனடியார்கள் நெஞ்சு நெக்குருகுமாறு இசையுடன் பாடத்தக்கவை. கோவில்களில் பூசையுடன் படிக்க வேண்டிய பஞ்சபுராணப் பாடல்கள் சிலவும் உள.

மதுரைத் தமிழ்ச்சங்கம், மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்த ரேஸ்வரர் கோவில், மதுரை பழமுதிர்ச்சோலை முருகன் கோவில் ஆகியவற்றுடனும் சைவ சமய நிறுவனங்கள் ஆதீனங்கள் பலவற்றுடனும் தொடர்புள்ளவருமான அற நெறியண்ணல் கி. பழநியப்பனார் அவர்கள், தமது 85வது வயதில் இந்த நூலை ஆக்கம் செய்து தந்தார்கள். அவர் களுக்கு எமது நன்றி.

த. நீதிராஜா
தெ. ஈஸ்வரன்
பொ. பாலசுந்தரம்
**அறங்காவலர்**

105, கொட்டாஞ்சேனைத் தெரு
கொழும்பு 13.
மார்கழி, தி.பி 2026

# பொருளடக்கம்

பக்க எண்

உ

*சிவமயம்*

# முன்னுரை

அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே

**— திருமந்திரம் (270)**

அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு

**— தமிழ்மறை**

என்பில் அதனை வெயில்போலக் காயுமே
அன்பில் அதனை அறம்

**— தமிழ்மறை**

வேதம்பசு; அதன்பால் மெய்யாகமம்; நால்வர்
ஓதும் தமிழ் அதனின் உள்ளூறும் நெய் — போதமிகு
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணை மெய்கண்டான்
செய்த தமிழ் நூலின் திறம்

**— பழம்பாடல்**

உலகப் பொதுமறை வகுத்த திருவள்ளுவர், ''வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை யில'' என்று அருளுகிறார். எக்காலத்திலும் இடும்பைப் படாத ஒரு வாழ்வு வேண்டுமாயின் விருப்பு வெறுப்பற்ற இறைவன் திருவடிகளைப் பற்றவேண்டுமென்பது இதன் பொருள்.

உலகில் வாழும் உயிர்இனம் அனைத்தும் இன்பத்தையே விரும்பும், துன்பத்தை விரும்பா.

அதனால் இன்ப துன்பங்கள் எவ்வாறு ஏற்படுகின்றன என்பதை அறிதல் நன்று. கடவுள், உயிர்கள், உலகத்தில் காணும் பொருள்கள் ஆகியனவுக்கு இடையே உள்ள தொடர்பு எத்தகையது என்பதை முதலில் அறிந்து கொள்ள வேண்டியது இன்றியமையாமையாகும்.

இவற்றைத் தெரிந்து கொள்ளாமல் ஓர் இயல்பான இறைப் பற்றைப் பெற முடியாது. இயற்பற்றில் தோன்றுவதே சமயமாகும். ஒவ்வொரு சமயமும் அடிப்படையில் சில அரிய தத்துவங்களைக் கொண்டிருக்கும். அத்தத்துவக் கருத் தினைத் தெளிவாக விளக்குவதற்கு ஏற்பட்டதே சமயச் சடங்குகள்.

ஆனால் நாளடைவில் தத்துவங்கள் மறக்கப் பெற்றுச் சடங்குகளே சமயநெறியாகக் கொள்ளப் பெற்றன. அதன் விளைவாகவே சமயப் பூசல்களும் சண்டை சச்சரவுகளும் எங்கும் தலைவிரித்து ஆடுகின்றன.

சமய வாழ்வில் அதன் அடிப்படைத் தத்துவங்களை அறிய வேண்டியது இன்றியமையாமையாகும். அதை அறியாத இறைப்பற்று பயனற்ற வெறும் ஆடம்பரமே யாகும்.

ஆகவே சிவநெறியாகிய சைவ சமய் வாழ்க்கையை மேற் கொள்வோர் நல்வாழ்விற்கு எந்த அளவு தத்துவங்களை அறிய வேண்டுமோ அந்த அளவே இவ்வெளியீட்டில் தொகுக்கப் பெற்றுள்ளன. மற்றப் பகுதிகள் சித்தாந்தப் புலமையைக் காட்டுவதற்கே பெரும்பாலும் பயன்பெறும்.

சிறுவர்களும் விரும்பிப் படித்துப் புரிந்து கொள்ளவேண்டும் என்ற நோக்கத்துடன் இந்நூலைப் படங்களுடன் எளிய இனிய தமிழில் வெளியிட்டுள்ளோம். சித்திரங்களுடன் எடுத்துக்காட்டுகளைக் கொண்ட இத்தகைய நூல் இது வரை வேறு வெளி வந்ததில்லை. இதுவே முதல்நூலாகும்.

காலத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு சீரிய வாழ்க்கை நடத்தத் துணை செய்யும் சமயமே உண்மையான சமய மாகும். அத்தகைய சமயமே சைவ சமயம். சாதி, சமயம்,

மொழி, நாடு பேதமில்லாது மனித இனம் யாவர்க்கும் இம்மையில் நல்வாழ்வும் மறுமையில் பேரின்பமும் கொடுக்கக்கூடிய சமயம் சைவமேயாகும்.

வான்முகில் வழாது பெய்க,
மலிவளம் சுரக்க
மாண்புடன் மக்களாட்சி நிகழ
மன்னுயிர் இன்புற
★நான்முறை அறங்கள் ஓங்க
நற்றவம் மல்க
மேன்மைகொள் சைவ நீதி
விளங்குக உலகெலாம்.

*(★ நான்முறை — சரியை, கிரியை, யோகம், ஞானம்)*

இந்நூலை அன்புடன் வெளியிடும் கொழும்பு, கொட்டாஞ்சேனை, அருள்மிகு வரதராஜ விநாயகர் கோவில் அறங்காவலர்களுக்கும், சித்திரங்களை அருமையாக வரைந்து கொடுத்த ஓவியர் உயர்திரு அ. சந்திரஹாசன் அவர்களுக்கும், அழகிய முறையில் அச்சிட்டு நூல்வடிவமாக்கிய காந்தளகம் அச்சகத்தாருக்கும் இந்நூல் சிறந்த முறையில் வெளிவருவதற்குச் சகல முயற்சிகளையும் மேற்கொண்டு இரவு பகலாக உழைத்த என் மதிப்பிற்குரிய நண்பர் மறவன்புலவு உயர்திரு க. சச்சிதானந்தன் அவர்களுக்கும் என் உளங் களித்த நன்றி உரித்தாகுக.

இங்ஙனம்

ஆவணி, தி.பி 2026 கி. பழநியப்பனார்.



# ஒன்றே கடவுள்




சைவ சித்தாந்தத்தில் முதல்வனைப் பதி என்று கூறுவர். பதியே முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான்.

# உயிர்கள் எண்ணற்றவை



உயிர் எனும் ஆன்மாவைப் பசு என்று கூறுவர்

# உலகம்



உடம்பொடு கூடிய உயிர்கள் போக்குவரவு புரிந்து இன்ப துன்பங்களை அனுபவிக்கும் இடம்

இங்கு உலகம் என்பது நாம் வாழும் பூமியை மட்டுமல்ல சூரியன் சந்திரன் நட்சத்திரங்கள் முதலிய அடங்கிய அண்டத்தையும், நாம் கண்டும் கேட்டும் நுகர்ந்தும் உண்டும் தொட்டும் அனுபவிக்கும் சகலபோகப் பொருள்களையும் குறிக்கும்.

இவை அனைத்தையும் **பாசம்** அல்லது **தளை** என்பர்




இவற்றையே

## முப்பொருள்

என்பர்.

1. **கடவுள்**
2. **உயிர்**
3. **பாசம்**

முப்பொருட்களில் **கடவுள்** பேரறிவுடையது, **உயிர்** சிற்றறிவுடையது, **பாசம்** அல்லது தளை என்று கூறப்படுவன உயிர்களை அடிமைப்படுத்தும் பொருட்களாம். அவை அறிவற்றவை.




# முழுமுதற்பொருளாம் கடவுள் ஒருவனே

அவன் எங்கும் வியாபித்து இருப்பவன். ஒன்றாய் உலகனைத்தும் ஆனவன். அதற்கு அப்பாலும் உள்ளவன். எல்லாம் வல்லவன்.

தோற்றமும் அழிவும் இன்றி என்றும் உள்ளவன்.

தனக்கு ஓர் உவமையிலான் ஆகிய கடவுளின் குணங்கள் எட்டு வகையாம்.

அவை முறையே:

1. தன் விருப்பம்போல் எதையும் செய்வோன்
2. ஒரே நேரத்தில் முக்காலத்தையும் அறிபவன்
3. எல்லா அறிவையும் இயல்பாய் உடையோன்
4. அளவிலா ஆற்றல் பெற்றோன்
5. வரம்பிலா இன்பம் உடையவன்
6. பேரருளாளன்
7. பாசங்கள் சாராதவன்
8. தூயவன்,

என்பனவாம்.

**கடவுளுக்கு,**

1. உருவம் உண்டு
2. உருவம் இல்லை
3. அருவுருவம் (ஒரு குறி)

**என்ற மூன்று கொள்கைகளையும் சைவ சித்தாந்தம் ஏற்று மதிக்கும்**




# உயிர்கள் எண்ணற்றவை

ஒவ்வொரு உடலிலும் வேறுவேறு உயிர்கள் நிற்கும். உயிர்களில் ஆண்பெண் வேறுபாடு இல்லை.

ஆதியில் ஓர் உடலைப் பெறுமுன் உயிர்கள் அறிவு இச்சை செயல் இன்றி அறியாமையில் மூழ்கித் தனியாகக் கிடக்கும். அந்நிலையைக் **கேவல** நிலையென்பர்

**இறைவனைப் போன்றே உயிரும் தோற்றமும் அழிவுமில்லாத என்றும் உள்ள பொருளாகும்.**

**சிற்றறிவுடைய உயிரின் குணங்கள்:**

1. உயிர் எதையும் தானே அறியாது ஐம்பொறிகளின் உதவி யால் அறியும்; அதுவும் இறைவன் அறிவுக்கு அறிவாய் நின்று அறிவிக்கவே அறியும்.

2. சார்ந்த வண்ணம் ஆதல்; அதாவது,




இதுபோன்றே பிற உடல்களிலும் அதனதன் தன்மைகளைப் பெறும்.

# உடம்பு (தனு)

கீழ்கண்ட நான்கு முறைகளில் தோன்றும்.




படைப்பில் காணும் தனுக்களின் பேதங்கள் 84 இலட்சங்களாகும்.

| | | |
|---|---|---|
| 1. ஊர்வன | - 11 | இலட்சம் |
| 2. நீர் வாழ்வன | - 10 | இலட்சம் |
| 3. பறவைகள் | - 10 | இலட்சம் |
| 4. மிருகங்கள் | - 10 | இலட்சம் |
| 5. தாவரம் | - 20 | இலட்சம் |
| 6. மானிடர் | - 9 | இலட்சம் |
| 7. தேவர்கள் | - 14 | இலட்சம் |

ஆகமொத்தம் - 84 இலட்சம்

இவ் ஏழுவகைப் பிறப்புக்களையே எழுபிறப்பு என்பர்

# உயிர்கள் அறிவுபெறப் பயன்படும் ஐந்து கருவிகள்

1. மெய் -  சருமம்

2. வாய் -  பேச்சு

3. மூக்கு -  நுகர்வு

4. செவி -  கேள்வி

5. கண்-  பார்வை

பண்டைத்தமிழர் அறிவின் அடிப்படையில் உயிர்களை ஆறு வகையாய்ப் பிரித்தனர் என்கிறார் தொல்காப்பியர்.

1. மெய் - ஒன்றை மட்டும் உடையன
*(புல், மரம், தாமரை முதலியன)*
2. மெய், வாய் - இரண்டும் உடையன
*(நந்து, நத்தை, சங்கு முதலியன)*
3. மெய், வாய், மூக்கு - மூன்றும் உடையன
*(சிதல், எறும்பு, அட்டை முதலியன)*
4. மெய், வாய், மூக்கு, செவி - நான்கும் உடையன
*(நண்டு, தும்பி முதலியன)*
5. மெய், வாய், மூக்கு, செவி, கண் - ஐந்தும் உடையன
*(மிருகம், பறவை, பாம்பு, மீன், ஆமை முதலியன)*
6. மெய், வாய், மூக்கு, செவி, கண், உடன் மனமும் உடையன
*(மனிதர், தேவர் முதலானோர்)*

*(குரங்கு, யானை, கிளி இவற்றிற்கும் ஆறறிவு உண்டு)*

# தனு கரண புவன போகம்

**1. தனு:**

தனு எனும் உடம்பு மட்டும் உயிர் பெறுவதால் பயனில்லை

**2. அந்தக்கரணங்கள்:**

அந்தக்கரணங்கள் ஆகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் எனும் நான்கும் இருந்தால்தான் உயிரின் அறிவு விளக்கமுற்று செயல்படும்

**3. புவனம்:**

புவனம் எனும் உலகம் இருந்தாலே உடம்பைப் பெற்ற உயிர் தங்கி இருந்து ஏதும் செயல்புரிய முடியும்

**4. போகம்:**

போகம் எனும் அனுபவிக்கப்படும் பொருள்கள் இருந்தால் தான் உயிர்கள் இன்ப துன்பங்களை விருப்பு வெறுப்புடன் அனுபவிக்கமுடியும்

அந்தக் கரணங்கள் உயிரில் நுண்பொருளாக இருப்பவை

கேவலநிலையில் செயலற்றுக்கிடக்கும் உயிர்களுக்குப் பாச மாகிய தனுகரணபுவன போகங்களைக் கொடுக்கக்கூடியவன் கருணையே உருவான இறைவன் ஒருவனேயாகும். ஏனெனில் இறைவன், உயிர்கள் ஆகிய இரண்டையும்தவிர அறிவுடையன வேறு இலாமையேயாகும்.

**பாசமும் பதி எனும் இறைவனைப் போன்றும் பசு எனும் உயிர்களைப் போன்றும் அழிவில்லாத என்றுமுள பொருளே யாம்.**

# அவன், அவள், அது



இந்த மூன்று சொற்களால் சுட்டிக்காட்டக் கூடிய பொருட்கள் அனைத்தும் தோன்றி நின்று அழிவனவே. அவ்வாறு சுட்டிக் காட்ட இயலாதன அழிவில்லாத நித்தியப்பொருட்களாம்.

**சைவ சித்தாந்தத்தில் அழிவு என்றால் பருப்பொருள் நுண் பொருளாக மாறுவதையே குறிக்கும்.**

கண்களுக்குத் தெரிவன பருப்பொருள் ***(தூலம்)***

தெரியாதன நுண்பொருள் ***(சூக்குமம்)***

நுண்பொருளாக இருப்பது பருப்பொருளாக மாறுவதையே **சற்காரிய வாதம்** என்று சித்தாந்தம் கூறும் அதாவது உள்ள னவே தோன்றும் இல்லாதன தோன்றாது.

# பதி, பசு, பாசம்
## ஆகிய மூன்றும் ஆதியும் அந்தமும் இல்லா நித்தியப்பொருட்கள்



இதுவே சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக்கொள்கை. இம் மூன்றையும் தவிர வேறு மூன்று நித்தியப் பொருட்களும் உண்டு. அவை பின்னர் விளக்கம் பெறும்.

நுண்பொருளான உடம்பு முதலிய பாசப்பொருட்களைப் பருப் பொருளாகத் தோற்றுவித்தது **யார்? ஏன்? எப்படி?**

## யார்?

1. தோற்றுவித்தது இறைவன்.

## ஏன்?

2. அறியாமை ஆகிய இருளில் அழுந்திக் கிடந்த உயிர்களின் அறிவு விளக்கம் பெறுவதற்காக.

## எப்படி?

3. சங்கற்பத்தால்—அதாவது நினைத்ததை உடனே தோற்று விக்கும் ஆற்றலால்—அதுவே இறைவனின் அருட்சக்தியாகும்.




உயிர் அறிவுடையதாயின் அதனை அறியாமை எவ்வாறு பற்றும்?

உயிர் என்றுளதோ அன்றுமுதலே அறியாமை எனும் குற்றம் அதனைப்பற்றியே நிற்கும். அக்குற்றத்தை மூலமலம் அல்லது **ஆணவமலம்** என்பர்.

**உயிர் நித்தியப் பொருளானதால் அதனைப்பற்றி நிற்கும் ஆணவமலமும் அழிவிலா நித்தியப்பொருளாம்.**

பாசமாகிய ஆணவம் கண்களுக்குப் புலப்படாத நுண்பொருள் **(சூக்குமம்)** அறிவற்ற சடப்பொருள்.

பலபொருட்களை மறைக்கும் ஒரே இருளைப் போன்று பல உயிர்களின் அறிவை மறைத்து நிற்கும் ஆணவம் ஒன்றே ஒன்றுதான். ஒன்றேயாயினும் அது பொருந்திய ஆன்மாக் களின் தரங்களுக்கும் எண்ணிக்கைக்கும் ஏற்பப் பலவாகும்.





செம்பின் புறத்தும் அகத்தும் களிம்பு வியாபித்திருக்கும். அது போன்று உயிர் முழுவதையும் ஆணவம் வியாபித்திருக்கும். உயிரும் ஆணவமும் சமவலிமை உடையன, அதனால் உயிர் அதனைத் தானாக நீக்கிக்கொள்ள இயலாது.

**கேவலம், சகலம்,** முத்தி ஆகிய மூன்று நிலைகளிலும் உயிரை ஆணவம் நீங்காது.

ஆணவத்தை நீக்கவேண்டின் வேறுஒருவர் துணைவேண்டும். (ஆணவத்தை நீக்குதல் என்பது அதன் வன்மையைக் குறைத் தலே). உயிருக்கு அத்தகைய துணை இறைவனின் திருவருளே யாகும்.

## கேவலநிலை

*(உயிர் ஓர் உடம்பைப் பெறாத ஆதிநிலை)*



இந்நிலையில் ஆணவமலம் உயிரின் அறிவை மறைத்து அறிவற்ற ஒரு சடப்பொருளைப் போன்றே செயலற்ற மயக்க நிலையில் வைத்திருக்கும்.

## சகலநிலை

*(உயிர் உடம்பைப் பெற்ற நிலை)*

உயிரின் மெய்யுணர்வை அடக்கி விபரீத உணர்வை ஆணவம் தோற்றுவிக்கும். இழிபொருளை உயர்வாகவும் துன்பத்தை இன்பமாகவும் கருதச் செய்யும்.

கீழ்க்கண்ட ஏழு குற்றங்களை விளைவிக்கும்



1. **மோகம்** *(மயக்கம்)*
2. **மதம்** *(செருக்கு)*
3. **இராகம்***(ஆசை)*
4. **கவலை**
5. **தாபம்** *(துன்பம்)*
6. **வாட்டம்**
7. **விசித்திரம்** *(உடைமைச்செருக்கு)*

# முத்திநிலை

*(சிவன் திருவடியை உயிர் அடைந்த நிலை)*



உயிர் தாம் செய்த தவப்பயனால் இறைவன் திருவருளை நேரே பெற்று விளங்கும்பொழுது அப்பேரொளியின் முன் ஆணவத்தின் மறைப்புச் சக்தி சற்றும் முனைந்து நிற்க இயலாது; அடங்கிக் கிடக்கும்.

*(சூரிய ஒளியில் விளக்கொளி அடங்கி இருப்பது போன்று)*

**உயிரின் மூன்று நிலைகளிலும் ஆணவம் அதனை விட்டுப் பிரியாது.** ஏனெனின் ஆணவம் உயிரைப் போன்று நித்தியப் பொருளானதால் அதன் செயல்திறன் மட்டும் ஒவ்வொரு நிலையிலும் வேறுவேறாக இருக்கும்.

# மாயாமலம்



உலகத்திற்கும் தனு, கரண, போகங்களுக்கும் மாயை எனும் பொருளே வித்தாகும். அது ஓர் அறிவற்ற சடப்பொருள். அது ஒன்றேயாயினும் எங்கும் வியாபித்திருக்கும் ஒரு நுண் பொருள் **(சூக்குமம்).**

இறைவனின் உடைமைப்பொருள் அவன் விருப்பப்படி வெளிப் படும். இதனை மாயாமலம் என்பர். இதுவும் அழிவற்ற ஒரு நித்தியப் பொருளாகும். உயிரை ஆதிமுதல் பற்றி நின்ற ஆணவம் நித்தியப் பொருளாதல் இயல்பு. ஆனால் இடையில் வந்து பற்றிய மாயை எவ்வாறு நித்தியப்பொருளாகும்? **மாயை இறைவனின் உடைமைப் பொருள் ஆனதால் அதுவும் இறைவனைப் போன்று நித்தியப் பொருளாகும்.**

உயிர்களைச் சூழ்ந்த ஆணவமாகிய இருளினை நீக்கும் ஒரு விளக்கே **மாயாமலம்**



# கன்மமலம்



ஒரு மரம் முளைத்து வளர வித்து, மண், நீர், சூரிய ஒளி ஆகிய நான்கும் வேண்டும். அவற்றுள் வித்தின்றி மற்ற மூன்று மட்டும் இருந்தால் போதாது. வித்து ஒன்றே மரத்திற்கு மூல காரணம். அதுபோன்றே கன்மம் என்ற முன்வினையே உயிர் கள் உடம்பைப் பெறவும் இன்பதுன்பங்களை நுகரவும் வாழ் நாளின் கால எல்லைக்கும் மூலகாரணமாகும். நல்வினை புண்ணியத்தையும், தீவினை பாவத்தையும் கொடுக்கும்.

அவற்றைச்செய்த உயிர்களே அப்புண்ணிய பாவங்களை அனுபவிக்க வேண்டியது இயற்கை நியதி. அதனால் சடப் பொருள்களாகிய அப்புண்ணிய பாவங்களை அவற்றைச் செய்த அந்தந்த உயிர்களுக்குத் தவறாது கூட்டிவைப்பவன் இறைவனேயாகும்.

**கன்மம் இறைவனின் உடைமைப் பொருளானதால் நுண் பொருளாகிய கன்மமும் அழிவற்ற நித்தியப்பொருள்.**

# பாவம் புண்ணியம்



**இருவினைகளின் தோற்றம்** உள்ளதே தோன்றும் என்ற சற்காரியவாதத்தின்படி வினை தோன்றுவதற்குமுன் அது ஓர் உள்ள பொருளாக இருக்க வேண்டும். அப்பொருளே **மூல வினையாகும்.**

இது எப்பொழுதும் ஒரே நிலையில் இருக்கும். இதிலிருந்து தோன்றும் வினைகளே மனத்தாலும் வாயாலும் உடலாலும் பற்பல செயல்களைச் செய்யும். அவற்றின் பயனாய்த் தோன்றுவதே பாவ புண்ணியங்கள்.

***ஓர் எடுத்துக்காட்டு***

எழுத்தாற்றலை ஒரு மாணவனின் **மூலவினை** எனக் கொள்க; அவ்வாற்றல் எப்பொழுதும் ஒரே நிலையில் இருக்கும்.

இவ்வாற்றலைப் பயன்படுத்தி மாணவன் தம் மனத்தில் தோன்றிய வழியில் தேர்வு எழுதுகிறான். இதுவே அவன் செய்யும் **வினைகள்.**

தேர்வில் வெற்றி தோல்வி அவனுக்கு உரிய காலத்தில் அறிவிக்கப்படும்; அதுவே அவன் செய்த **வினையின் பயன்.**

இதுபோன்றே காரணமாயிருக்கும் **மூலவினை** காரியப்படும் போது தோன்றும் **வினைகளின்** பயனாகவே உயிர்களுக்குப் பாவ புண்ணியங்கள் ஏற்படும். உரிய காலத்தில் அதன் பயனை அவ்வவ் உயிர்களைச் சாரும்படி இறைவன் அருள்புரிவான்.



## ஐயம்

1. வினைப்பயனால் பெறுவதே பிறப்பும் உடலும்; உடலின்றி வினையில்லை; என்பன இயற்கை நியதியாயின் இதில் முந்தியது வினையா உடலா?

2. கருணையே உருவான இறைவன் உயிர்களுக்கு உடல்களை ஒரேமாதிரி கொடுக்காது பல்வேறு தோற்றத்தில் கொடுப்பது ஏன்?

3. ஆணவமலம் சில உயிர்களை வன்மையாகவும், சிலவற்றை மென்மையாகவும் பற்றுதல் ஏன்?



## தெளிவு

1. முந்தியது நுண் உடலேயாகும். அதன் விருப்பு வெறுப்பிற்கு ஏற்ப செய்யும் வினையின் பயனாக உயிரின் பிறப்பும் பருவுடலும் அமையும். திடீரெனப் பார்வை பெற்ற ஒரு பிறவிக்குருடன் தன் எதிரில் இருந்த பழங்களில் எதை விரும்பி உண்கிறானோ அதன் சுவையையே அவன் நுகர்வது போன்று.

**2. இறைவன் எல்லா உயிர்களுக்கும் ஒரே மாதிரியான நுண் உடலையே கொடுத்துள்ளான். அதில் வேறுபாடு கிடையாது.**

3. உயிர்களின் அறிவு ஒரே அளவில் எல்லோர்க்கும் இல்லை என்பதை நாம் காண்கின்றோம். அந்த அறிவிற்குத் தக்கவே ஆணவமல அழுத்தம் வேறுபடும்.

சேற்றில் போட்ட இலேசான பொருளும் கனமான பொருளும் அழுந்தும் ஆழம் வேறுபடுவது போன்றதே.

# சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கை

## ஆதியும் அந்தமும் இல்லாத பொருட்கள் ஆறு

1. **பதி** *(கடவுள்)*
2. **பசு** *(உயிர்கள்)*
3. **பாசம்** *(போகப்பொருட்கள்)*
4. **ஆணவம்** *(அறியாமை)*
5. **மாயை** *(அண்டப்படைப்பிற்கான ஒருமூலப்பொருள்)* *(ஒன்றை வேறாகக் காட்டும் ஒரு மயக்கம் என்று, இதனை வேதாந்தம் கூறும்-சைவ சித்தாந்தம் அதனை ஏற்றுக்கொள்வதில்லை.)*
6. **கன்மம்** *(முன்வினைப்பயன்)*

''ஏகன் அனேகன் இருள் கருமம் மாயையிரண்(டு)
ஆக இவை ஆறும் ஆதியில்''

**— சாத்திர நூல், திருவருட்பயன் (52)**

# உயிருக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு

**ஒன்றாய், வேறாய், உடனாய் ஆகிய மூன்று தன்மைகளிலும் உயிருடன் இணைந்து நிற்பன் இறைவன்**

1. ஒன்றாய் — உடலை உயிர்செலுத்தல் போன்று ஒன்றாய்க் கலந்து நின்று உயிரை இறைவன் செலுத்துவன்.

2. வேறாய் — பொருட் தன்மையில் உயிர் வேறு இறைவன் வேறு. உயிர் இறைவனல்ல என்பதே சித்தாந்தக் கொள்கை. இறைவனே உயிர் என்பது வேதாந்தக் கொள்கை

3. உடனாய் — உயிருக்கு உயிராய் இறைவன் இருப்பினும் உயிர் புரியும் நன்மை தீமைகளுக்கு அவன் ஒரு சாட்சியாய் உடன் இருப்பானே ஒழிய அதனால் பாதிக்கப்படான்.

**ஓர் எடுத்துக்காட்டு**



ஒரு மாணவன் தேர்வு எழுதுகிறான். அவன் வகுப்பு ஆசிரியரே அங்கு மேற்பார்வையாளராக இருக்கிறார். மாணவன் பிழையாக எழுதுவதைப் பார்க்கிறார். ஆனால் அதைச் சுட்டி காட்டவில்லை. *(அது நேர்மை அல்ல)* பிழையின் பயனை மாணவனே அனுபவிக்க வேண்டும். ஆசிரியர் சாட்சியாகவே இருந்தார்.

# உயிரின் அளவு (பரிமாணம்)

கடவுள் சகல அண்டங்களுக்கும் அதற்கு அப்பாலும் வியா பித்து இருப்பவன். அவன் இல்லாத இடமில்லை, பொருளில்லை.

உயிர், கடவுளின் வியாபகத்துக்கு உட்பட்டு அடங்கிய வியா பகமாக இருக்கும். இதனை **வியாப்பியம்** என்பர்.

உயிர்கள் ஒவ்வொன்றும் தனித்தனியாக இவ்வியாப்பியத்தில் வியாபித்திருக்கும்.

***எடுத்துக்காட்டு.***

**உலகில் ஆயிரக்கணக்கான வானொலி நிலையங்கள் ஒலி பரப்புகின்றன. பலவகை ஒலிகள் அனைத்தும் ஒரே வானில் தான் வியாபித்திருக்கின்றன. இதுபோன்றே உயிர்களும் ஒரே வியாபகத்துள் இருக்கும். உயிர்களின் வியாபகம் ஆணவ மலம் எனும் இருளில் அழுந்தி அறிவு செயற்படாது முடங்கிக் கிடக்கின்றன என்பதை அறிவோம். உயிரின் இந்நிலைக்கு இரங்கி இறைவன் அதன் அறிவை விளக்க மாயை எனும் பொருளால் ஆக்கிய ஓர் உடலைக் கொடுக்கின்றான்.**



**உயிரில் அவ்வுடல் உள்ள அளவிற்கு மட்டுமே அறிவு விளங் கும். மற்றப்பகுதி ஆணவ இருளிலேயே இருக்கும்.**

**ஒரு கருப்பு நிறத்துண்டில் வட்டமாக வெள்ளை வர்ணம் பூசி யுள்ளது. துண்டின் அளவு உயிரின் வியாப்பியம். வெள்ளை**

வட்டம் உடல்பெற்ற உயிர். வெள்ளை வட்டம் துண்டின் ஒரு பகுதியே; அது துண்டின் முழு அளவு ஆகாது. இது போன்றே **உடல்பெற்ற உயிர் உயிரின் முழு அளவு ஆகாது; ஒரு பகுதியே யாகும்.**

***எடுத்துக்காட்டு:***

கால்பந்து ஒன்றில் காற்றை அடைக்கின்றோம். அது எங்கும் வியாபித்துள்ள காற்றே. பந்தைப் பிடித்து அடித்து உதைத்து விளையாடுகிறோம்; ஆனால் வெளியிலுள்ள காற்றை அவ் வாறு செய்ய இயலாது.

பந்து உடலைப் போன்றது. காற்று உயிரைப் போன்றது.



*(குறிப்பு: காற்று உயிரன்று — இங்கு உதாரணத்திற்காகக் கூறப்பட்டது)*

உயிரின் பரிமாணத்தை மகத்துப்பரிமாணம் என்று சித்தாந்தம் கூறும்.

*(மகத்து — பெரிய)*

# உயிரின் மூன்று குணங்கள்

1. **அமைதி** *(சாத்விகம்)*



2. **ஆதிக்கம்** *(இராசதம்)*



3. **மயக்கம்** *(தாமதம்)*



மாயையில் தோன்றிய **கரணங்களில்** மலர்ந்தனவே இவை. எல்லா உயிர்களுக்கும் இம் முக்குணங்கள் உண்டு. ஆனால் அவை ஒரே அளவில் நிலையாக இருக்காது, எண்ணற்ற விகிதாசாரங்களில் கலந்து அடிக்கடி மாறும். மனிதர் குணங்கள் வேறுபட்டிருப்பதற்கு இதுவே காரணம்.

**அமைதி** *(சாத்விகம்)*
மேலோங்கி இருந்தால் சாந்தம் — பக்தி முதலிய தோன்றும்.

**ஆதிக்கம்** *(இராசதம்)*
மேலோங்கி இருந்தால் பற்றுள்ளம் — விடாமுயற்சி முதலிய தோன்றும்.

**மயக்கம்** *(தாமதம்)*
மேலோங்கி இருந்தால் சோம்பல் — பாவச்செயல் — தூக்கம் முதலிய தோன்றும்.

# இறைவனின் தொழில்

''தொழுவார்அவர் துயர் ஆயின தீர்த்தல் உன் தொழிலே'' என்று சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய இறைவன் தொழில் ஐந்து.

**1. படைத்தல்:** கேவல நிலையில் கிடந்த உயிர்கள் உய்வ தற்குத் தனு, கரண, புவன, போகங்களை மாயையில் இருந்து தோற்றுவித்துக் கொடுத்தல்.

**2. காத்தல்:** தோற்றுவித்த தனு முதலியவற்றை நிறுத்தி உயிர் களுக்குப் பயன்படுமாறு செய்தல்.

**3. அழித்தல்:** வினை காரணமாக உயிர்கள் பல பிறவிகள் எடுத்து உழன்றதால் ஏற்பட்ட களைப்புத் தீரச் சற்று ஓய்வு தேவை என்று தனு முதலியவற்றை உயிர்களை விட்டுப் பிரித்தல்.

**4. மறைத்தல்:** *(திரயோதனசக்தி)* உயிர்கள் வேறு ஒன்றில் நாட்டம் செலுத்தாது உலக இன்ப துன்பங்களை அனுபவித்தல் மூலமே ஆணவமலத்தின் சக்தி ஒடுங்கும். அதனால் உயிர் களின் நாட்டத்தைத் தன்பால் ஈர்க்கக் கூடாது என்று இறை வன் தன்னைக் காட்டாது மறைத்தல்.

**ஓர் எடுத்துக்காட்டு;** குழந்தை பள்ளியில் படிப்பதைத் தாயார் காண விரும்புகிறாள். வகுப்பின் உள்ளே சென்று நின்றால், அந்த மழலை 'அம்மா' என்று ஓடிவந்து அணைந்து கொள் ளும். அதனால் படிப்பிற்கு இடையூறு ஏற்படுமென்று மறைந்து நின்று பார்ப்பதற்கு ஒக்கும்.

**5. அருளல்:** ஆணவத்தின் சக்தி ஒடுங்கியவுடன் உயிர்களுக்கு இயல்பாக இறைவனை அடையும் விருப்பம் தோன்றும். அந் நிலையில் இறைவன் தன்னைக்காட்டி மலங்களை நீக்கி ஆட் கொள்வான்.

# பக்தி



இவ்வாறு இறைவன் ஐந்தொழில்கள் புரிவது தன்னலம் கருதி யன்று. உயிர்கள் பிறப்பு இறப்பு ஒழிந்து முத்திப்பேறு அடை தல் வேண்டும் என்பதற்கேயாம். இதனை மனத்தில் கொண் டால் அவனருளால் தனு, கரண, புவன போகங்களைப் பெற்ற உயிர்களுக்கு இறைவன்பால் கடமை உணர்வும் நன்றி உணர்வும் தோன்றும். கல்மனமும் கசிந்து உருகும் அதுவே **பக்தி** ஆகும்.

முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட
அத்தன் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே.

— **திருவாசகம் (650)**

# பாவ புண்ணியம்



குவிதலும்



குறைதலும்

செயல்களில் எது பாவம், எது புண்ணியம் என்பதை எப்படி முடிவு செய்வது?

இறைவன் உயிருக்கு உயிராக நிற்பவன். எல்லாச் செயல் களுக்கும் அவன் சாட்சியாக இருப்பவன். அதனையே மனச் சாட்சி என்பர்.

ஒரு வினை பாவமா புண்ணியமா என்பதை அவரவர்கள் மனச்சாட்சியே அறிவுறுத்தும். அதன்படி நடப்பதே அறம்.

''மனத்துக்கண் மாசிலன் ஆதல்
அனைத்து அறன்''

என்று வள்ளுவர் உறுதியாகக் கூறுகின்றார்.

ஒரே செயல் பாவமாகவும் புண்ணியமாகவும் சில சமயங் களில் அமையும்.

**எடுத்துக்காட்டு.**



சிறுவன் ஒருவனை வெறிநாய் ஒன்று கடிக்கத் துரத்துகின்றது. அதைக்கண்ட ஒருவர் கல்லை எறிந்து நாயைக் காயப்படுத்தி விரட்டுகிறார். இவ்வினை நாயைப் பொருத்தவரை பாவச் செயல், சிறுவனைப் பொருத்தவரை புண்ணியச்செயல். மனநிலையைப் பொருத்ததே பாவபுண்ணியங்கள். அவை அறிந்தும் அறியாமலும் நடைபெறலாம்.

# வினைகளின் மூன்று நிலைகள்

1. பழவினை — தொல்வினை *(சஞ்சிதம்)*

2. புதுவினை — வருவினை *(ஆகாமியம்)*

3. ஊழ்வினை — நுகர்வினை *(பிராரத்துவம்)*

**1. பழவினை** *(சஞ்சிதம்)* மூலவினை முதற்கொண்டு செய்த வினைகள் பக்குவப்பட்டுப் பாவ புண்ணியப்பயனைக் கொடுக்கும் நிலை அடையும் வரை பழவினையாய்க் குவிந்திருக்கும். பக்குவப்படுதல் வினைசெய்த வரிசையில் இருக்காது.

தென்னையும் வாழையும் ஒரே நேரத்தில் பயிர் செய்தாலும் அவைபயன் தரும் நிலை முன்பின்னாக இருக்கும். அது போன்றே வினைகளும் முன்பின்னாக, பக்குவம் அடையும்.

**2. புதுவினை** *(ஆகாமியம்)* பக்குவப்பட்ட வினைகளை அவ்வவ் உயிர்களே அனுபவிக்கவேண்டுவது நியதி. ஆனால் வினைகளோ உயிர்களோ தாமே சென்று ஒன்றையொன்று பற்றாது. அவைகளை இறைவனே கூட்டிவைப்பான். அதன் பயனாக வினைகளுக்கு ஏற்பப் பிறப்பு, உடல், வயது முதலியன உயிர்பெறும். இவற்றைக் கொண்டு இப்பிறப்பில் செய்யும் வினைகள் 'ஆகாமியம்' எனப் பெயர்பெறும்.

**3. ஊழ்வினை** *(பிராரத்துவம்)* செய்த எல்லா வினைகளின் பயன்களையும் ஒரே பிறவியில் அனுபவித்துத் தீர்தல் முடியாது. எடுத்த பிறவியில் எவ்வெவ் வினைகளை அனுபவிக்க வேண்டுமென்றுளதோ அந்த அளவு வினையே ஊழ்வினையாம். ஊழ்வினையை அனுபவிக்கும்பொழுது செய்யும் வினைகள் பழவினைக் குவியலை அடைந்து பக்குவமாகிய பின் புதுவினையாகி அதற்குப்பின் ஊழ்வினையாகும்.




இவ்வாறு உயிரை வினைகள் ஒன்றையொன்று தொடர்ந்து பற்றி வந்தால் பிறவிக்கு எப்பொழுது முடிவு ஏற்படும். இதற்குச் சைவசித்தாந்தம் கூறும் உபாயம் என்ன? எல்லாம் வினைப்பயன்படியே நடக்கும் என்றால் கடவுள் என ஒருவர் தேவையா? என்ற எண்ணம் சிலருக்குத் தோன்றும்.

உயிருக்குத் தனு கரண புவன போகங்களைக் கொடுத்து உயிருக்கு உயிராக நின்று இயக்குவது கடவுள். அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்று சாத்திரமும் தோத்திரமும் கூறும்.

''புத்திமற் காரியத்தால் பூதாதி புருடன் தானும்
அத்தனு கரணம் பெற்றால் அறிதலால், அவற்றை மாயை
உய்த்திடும் அதனால், மாயைக்கு உணர்வு ஒன்றும்இல்லை என்றே
வைத்திடும், அதனால் எல்லாம் வருவிப்பான் ஒருவன் வேண்டும்''

**— சாத்திரநூல் சித்தியார்**

''நல்குரவும் இன்பமும் நலங்கள் அவை ஆகி
வல்வினைகள் தீர்த்தருளும் மைந்தன்'' **— சம்பந்தர்**

# இருவினைகளைச் செய்யும் கருவிகள்




**மனம்** - *(உள்ளம்)*
**வாக்கு** - *(உரை)*
**காயம்** - *(உடல்)* ஆகிய மூன்றுமே ஆகும்.

நல்வினை பொன்விலங்கு. தீவினை இரும்பு விலங்கு. பிறவாமை வேண்டின் இவ்விரு வினைகளும் நீங்க வேண்டும்.

அதற்கு உபாயம்

மனம் வாக்கு காயம் மூன்றையும் இறைவனுக்குத் தொண்டு செய்யும் அடிமைகளாக ஆக்குதலேயாம்.

# மூன்றுவகை உயிர்களும் மாயையும்.

**1. விஞ்ஞானகலர்**

ஆணவமலம் ஒன்றே மென்மையாக உடையவர்கள். இவர் களையடையும் மாயை சுத்தமாயை எனப்படும். இது மயக் கத்தைச் செய்யாது. இறைவன் ஏவல் வழி ஐந்தொழில்களைச் செய்யத் தகுதிபெற்ற உயிர்களுக்கு உடலாக அமைவது இம் மாயையேயாகும். இது நுண்பொருள்.

**2. பிரளயாகலர்**

ஆணவம் கன்மம் ஆகிய இருமலம் உடையோர். ஆணவம் நடுத்தரமாகப் பற்றி நிற்கும் இவர்களை அடைகின்ற மாயை சுத்தம் அசுத்தம் கலந்தது (சுத்தாசுத்தம்). இது சிறிதளவே மயக் கத்தைச் செய்யும் இது பருப்பொருள்.

**3. சகலர்**

ஆணவம் கன்மம் மாயை ஆகிய மூன்று மலங்களை உடைய வர்கள் *(மானிடர்)*. இவர்களை ஆணவம் வன்மையாகப் பற்றி நிற்கும். இம்மாயை அசுத்தமாயை எனப்படும். இது மயக்கத் தையே செய்யும். இது பருப்பொருள்.




மனம் வாக்கு காயம் மூன்றையும் இறைவனுக்குத் தொண்டு செய்யும் அடிமையாக்கச் சித்தாந்தம் நான்கு நெறிகளைக் கூறும்.

இறைவனுக்கு மனமுவந்து

1. உடலால் தொண்டு செய்தல் - **சரியை**

2. வாயாலும் உடலாலும் செய்தல் - **கிரியை**

3. அந்தக்கரணங்களால் செய்தல் - **யோகம்**

4. சிந்தித்துத் தெளிந்து மெய்ப்பொருள் காண்பது - **ஞானம்**

# சரியை

மனமுவந்து, உடலால் செய்யும் தொண்டுகள் காலத்திற்கும் சூழ்நிலைக்கும் இடத்திற்கும் தக்கவாறே அமையும்.

பண்டைய காலத்தில் திருக்கோவிலைக் கூட்டிப்பெருக்கிச் சாணத்தால் மெழுகுதல், பூந்தோட்டம் அமைத்தல், மலர் மாலை கட்டுதல், திருவிளக்கு ஏற்றல், பூசைக்கு வேண்டிய பொருட்களைச் சேகரித்துக் கொடுத்தல், துதிப்பாடல் பாடுதல், சிவனடியார்களுக்குப் பணிவிடை செய்தல் ஆகியவை சரியை எனக்கருதினர்.

இன்றைய சூழ்நிலைக்கும் வாழ்க்கை முறைக்கும் இது எந்த அளவு பொருந்தும் என்பதைச் சிந்திக்க வேண்டும்.

சரியைத்தொண்டிற்கு, துப்புரவு பணியாட்களும் ஓதுவார்களும் குருக்களும் நியமிக்கப்பெற்று இருக்கின்றனர். அதனால் நாம் செய்ய வேண்டியன இரண்டு.

1. மேற்கூறிய தொண்டர்கள் கவலையின்றி வாழச் செல்லும் வகையெலாம் நாம் உதவுதல் வேண்டும்.

2. திருக்கோயிலை அசுத்தப்படுத்தாது இருத்தல் வேண்டும். இவையே இயலும் சரியைத் தொண்டுகள்.

சரியைத் தொண்டில் சிறந்தது யாதெனின் நடமாடும் கோயில்களான உயிரினங்களுக்கு செய்யும் தொண்டே மிகச்சிறந்தது என்று திருமூலர் கூறுகின்றார்.

> படமாடும் கோயில் பகவற்கொன்று ஈயில்
> நடமாடும் கோயில் நம்பர்க்கங்கு ஆகா;
> நடமாடும் கோயில் நம்பர்க்கொன்று ஈயில்
> படமாடும் கோயில் பகவற்கு அதாமே

— **திருமந்திரம் (1857)**

நாம் இறைவனாகப் பாவித்து ஒரு விக்கிரகத்தை அமைத்த இடத்தையே கோயிலாகக் கருதுகிறோம். உயிருக்கு உயிராக இறைவன் நிற்கும் உடல்பெற்ற உயிரினங்களே நடமாடும் கோயில்களாகும். ஆகவே இந் நடமாடும் கோயிலுக்குத் தொண்டு செய்வதே சிறந்த சரியைத் தொண்டாகும்.

# நடமாடும் தெய்வத்திற்குச் செய்யும் தொண்டு



அவரவர்கள் செய்யும் தொழிலையே இறைவனை நோக்கிச் செய்யும் தவமாகக் கருதல் வேண்டும். நாயன்மார்கள் அவ் வாறு செய்தே முத்தி பெற்றனர் என்று பெரியபுராணம் கூறுகிறது.

திருநீலகண்டகுயவனார் திருவோடு செய்தும்,
திருக்குறிப்புத்தொண்டர் சலவைத்தொழில் செய்தும்,
அமர்நீதிநாயனாராகிய துணிவணிகர், கௌபீனம் கொடுத்தும்
இளையான்குடிமாறனார் ஆகிய நிலக்கிழார் உண்டிகொடுத்தும்
இதுபோன்றே மற்றவர்களும் பேரின்பநிலை எய்தினர்.

ஆகவே தெய்வத்தொண்டு என்று எண்ணி நாம் செய்யும் தொழில் எதுவாக இருந்தாலும் நேர்மையாக அதனைச்செய்ய வேண்டும். உணவுப்பொருட்களில் கலப்படம் செய்தல் கூடாது. வணிகத்தில் அளவுக்கு மிஞ்சி லாபம்பெற நினைத்தல் கூடாது. வாங்கும் கூலிக்கு வஞ்சனை இல்லாது கடமையைச்செய்யவேண் டும். பிறர் துன்பத்தை, தன் துன்பமாகக் கருதி உதவ முன்வர வேண்டும். கடமையை உணர்ந்து பணியாற்றும் மருத்துவர் களும், செவிலிகளும் ஆற்றுவதே உடம்பால் செய்யும் சிறந்த சரியையாகும்.

# கிரியை

*(மனமுவந்து வாயாலும் உடலாலும் செய்வன)*

நடமாடும் தெய்வத்திற்கு வாயால் செய்யும் தொண்டுகள்

1. இனிமையாகப் பேசுதல்
2. உண்மையே பேசுதல்
3. பிறரைப்பற்றி புறங்கூறாமை
4. பெரியோர்களை இழிவாகப் பேசாமை
5. பயனற்ற பேச்சைப் பேசாமை

முதலியனவாம்.

பேச்சைத் தொழிலாகக் கொண்ட

1. ஆசிரியர்கள்
2. வழக்கறிஞர்கள்
3. மேடைப்பேச்சாளர்கள்
4. சட்டமன்ற, பாராளுமன்ற உறுப்பினர்
5. வழக்குகளில் சாட்சி கூறுபவர்கள்

முதலானோர்.

எப்பொழுதும் வாய்மையை இனிமையாகக் கூறித் தம்தம் கடமைகளைச் செய்தலே சிறந்த கிரியை ஆகும். அதனால் மக்கள் நலம் பெறுவர். இன்ப உலகு மலரும்.

# யோகம்

*(மனம்,புத்தி,அகங்காரம், சித்தம் ஆகிய அந்தக்கரணங்களால் செய்யும்தொண்டு)*

இவற்றை மூச்சுப் பயிற்சியால் ஒருமுனைப்படுத்தி நாம் யார்? எப்படி வந்தோம்? நம் கடமை என்ன? அதனை எவ்வாறு நிறைவேற்ற வேண்டும்?என்பதைச் சிந்தித்துத் தெளிதல் வேண்டும். இவ்வாறு ''ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின் வானம் நணிய துடைத்து'' என்று வள்ளுவப் பெருந்தகை கூறுகிறார்.

# ஞானம்

யோகத்தால் தெளிந்து மெய்ஞ்ஞானம் பெற்றோர், உலகப் பொருள்களின் பற்றை விட்டுப், பற்றற்றானாகிய இறைவனையே பற்றி இன்பநிலை எய்துவர்.

''கற்றீண்டுமெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி''

என்பது வள்ளுவரின் வாய்மையுரை.

ஞானத்தில் **பாசம், பசு, பதி** என மூன்று **வகை உண்டு.**

**பாச ஞானம்;** உயிர்கள், கண், செவி முதலிய புறக் கருவிகளாலும், மனம், புத்தி முதலிய அகக்கருவிகளாலும் படித்தும் கேட்டும், உணர்ந்தும் பொருட்களை அறியும். உயிர்கள் சார்ந்தவண்ணம் ஆகும் தன்மை உடையன. அதனால் அப் பாசக்கருவிகளால் அறிந்த பொருட்களைச் சார்ந்து, அவை தாமே யாம் என்று மயங்கி அறியும்; அவ்வறிவே பாசஞானம்.

**பசு ஞானம்;** மேற்கூறியவாறு அறிந்தவை அறிவில்லாத சடக் கருவிகளால் பெற்றவை என்ற உண்மையை உயிர் உணர்ந்த நிலையில் அவையாவும் அசத்துப் பொருளென்றும் தாம் அதற்கு வேறான சித்துப் பொருளென்ற உணர்வு தோன்றும். அவை அனைத்திலிருந்தும் தம்மை வேறான உயர்ந்த பொருளாகக் காணும். அந்நிலையில் கருவி கரணங்களுக்குத்தானே தலைவன் என்ற எண்ணம் தோன்றும்; அதன் பயனாய்த் தாமே பதியாவோம் என்ற மயக்க அறிவும் தோன்றும். அவ் வறிவே பசுஞானம். (வேதாந்திகள் தாமே கடவுள் என்று கூறுவது இவ்வறிவின் பயனேயாகும்.)

**பதி ஞானம்;** உயிர்தாம் அறிவுடைப்பொருள் என்பதை அறிந்து, அவ்வறிவிற்கு அறிவாய் இறைவன் இருக்கிறான் என்பதை உணரும் நிலை தோன்றும். அப்பொழுது முன் கண்டு அனுபவித்த பாச ஞானத்தில் அறிவு சற்றும் செல்லாது எப்பொழுதும் பதியையே நோக்கும். அதுவே பதிஞானம் என்னும் சிவஞானம்.

# திருவைந்தெழுத்து

# ந — ம — சி — வ — ய

என்பனவே

இதனை உச்சரிக்கும் பொழுது வகாரக் குறிலை நெடிலாக்கி நமசிவாய என்பர். இறைவன் நாமமாகக் கூறும் பொழுது நமச் சிவாய என்பர்

**ந** — மறைப்பாற்றல் *(மருள்)*
**ம** — மும்மலங்கள் *(இருள்)*
**சி** — சிவபெருமான் *(பதி)*
**வ** — திருவருள் *(சக்தி)*
**ய** — உயிர் *(ஆன்மா)*

**நமசிவய** என்பதைத் தூல பஞ்சாட்சரம் என்பர் இதனைக் கணிப்பதன் மூலம் உலக இன்பங்களைப் பெறலாம். பொருள் அறிந்து கணித்தல் வேண்டும்

இதன் பொருள்: (இறைவன்) மறைப்புச் சக்தியால் மும்மலங் களும் நீங்கி சிவபெருமான் திருவருளால் ஆன்மா உய்வு பெறும். இதை மனத்தில் நிறுத்தி ஜபம்செய்ய வேண்டும். **சிவயநம** என்பதைச் சூட்சும பஞ்சாட்சரம் என்பர். இதனைக் கணித்தால் முத்திப்பேறு கிட்டும். இதன்பொருள் சிவபெரு மான் திருவருளால் ஆன்மா (இறைவன்) மறைப்புச் சக்தி யால் மலம்நீங்கப் பெற்று உய்வுபெறும். இதுபற்றி

**சம்பந்தர் — அப்பர் — மணிவாசகர்:**

ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்
தேனை வழிதிறந்து ஏத்துவார்க்கு இடர்
ஆன கெடுப்பன அஞ்செழுத்துமே — **சம்பந்தர்**

ஏதும் ஒன்றும் அறிவிலர் ஆயினும்
ஓதி அஞ்செழுத்தும் உணர்வார்கட்கும்
பேதம் இன்றி அவரவர் உள்ளத்தே
மாதும் தாமும் மகிழ்வர் மாற்பேறரே — **அப்பர்**

நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப் பெற்றேன்
தேனாய் இன் அமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்
தானே வந்து எனது உள்ளம் புகுந்து அடியேற்கு அருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே
— **மணிவாசகர் (554)**





ஓம் என்பதே பிரணவ மந்திரம். ஓம் என்று கூறியே மந்திரங் களை ஓத வேண்டும். ஆதியில் ஓம் என்று கூறியே வேதங் களை ஓதத் தொடங்குவர். பின்னரே 'ஹரிஓம்' என்று அதை மாற்றினர்

## அ — உ — ம்

என்ற மூன்று எழுத்துக்களே ஓம் ஆகும். வாயைத் திறப்பதன் மூலம் **அ** ஒலியும், உதட்டைக் குவித்தல் மூலம் உ ஒலியும், வாயை மூடுதல் மூலம் ம் ஒலியும் ஒலிக்கும். உலகில் பேசும் மொழி எதுவாயினும் அதற்கு வாயின் இம்மூன்று அசைவு களும் இன்றியமையாததாகும். ஓம் எந்த மொழியையும் சேர்ந்ததன்று அது பொதுவாக இறைவனைக் குறிக்கும் ஒரு மந்திர ஒலி.

தமிழைப் பொருத்த வரை 'ஓ' வின் அமைப்புப் பிள்ளை யாரின் யானை முகத்திற்கு ஒத்திருப்பது குறிப்பிடத்தக்கது. நாம் எழுதத் தொடங்கும் பொழுது போடும் பிள்ளையார் சுழி (உ) தான் ஓம். மந்திரங்களை ஓதும்பொழுது ஓம் ஒலி யுடன் தொடங்குதல் மரபு.

ஓமெனும் ஓங்காரத்துள்ளே ஒருமொழி
ஓமெனும் ஓங்காரத்துள்ளே உருவரு
ஓமெனும் ஓங்காரத்துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரத்துள்ளே ஒண் முத்தி சித்தியே

— **திருமந்திரம் (2676)**

# இறைவனே குருவாய்த் தோன்றுவன்



மந்திரங்களை ஒரு குருவின் வாயிலாகவே உபதேசம் பெற வேண்டுமென்பதே பொதுவிதி.

தவச் செயலால் ப்க்குவம் பெற்றவர்களுக்கு இறைவன் தானே குருவாகத் தோன்றி அருள்புரிவான் என்பதே சித்தாந்த நியதி. (இதற்குச் சான்று மாணிக்கவாசகர் வரலாறு)

ஏகலைவனைப் போன்று திருமுறைகளையும் சாத்திரங்களை யும் அடுக்கிவைத்து அதனையே குருவாகப் பாவித்து வழிபட வும். அத்துடன் நாளும் குறிப்பிட்ட நேரம் அவற்றைத் தொடர்ந்து கசடறக் கற்றுச் சிந்தித்துத் தெளியவும் இதுவே பேரின்ப நிலையைத் தரும் என்கிறார் அருள் நந்தி சிவாச் சாரியார்.

> ''பண்டை நற்றவத்தால் தோன்றிப்
> பரமனைப் பக்தி பண்ணும்
> தொண்டரைத் தானே தூயகதியினில்
> தொகுப்பர் (சன்)மார்க்கர்
> (மெய்)கண்ட நூல் ஓதி வீடு
> காதலிப் பவர்களுக்கு ஈசன்
> புண்ட ரிகத் தாள் சேரும்
> பரிசினைப் புகல லுற்றாம்

**— சிவஞான சித்தியார்**

# எதனையும் சிந்தித்து தெளிவோம்

காணவல் லார்க்கவன் கண்ணின் மணியொக்கும்
காணவல் லார்க்குக் கடலின் அமுதொக்கும்
பேணவல் லார்க்குப் பிழைப்பிலன் பேர்நந்தி
ஆணவல் லார்க்கே அவன்துணை யாமே

— திருமந்திரம் (2823)



சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படும்
சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே

— திருமந்திரம் (2853)

# தாம் வழிபடும் தெய்வத்தையே குருவாகக் கொண்டு ஞானம் பெற்ற அருட் செல்வர்கள்

1. நம்பியாண்டார் நம்பி
2. அவ்வைப் பிராட்டியார்
3. அருணகிரிநாதர்

**1. நம்பியாண்டார் நம்பி**

சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவர் அருளிய தேவாரப் பாடல்களை மறைவிடத்தில் வைத்துக் கறையானுக்கு இரையாகிக் கொண்டு இருந்தன. மன்னன் விருப்பத்திற்கு இணங்க அவற்றை நம்பியாண்டார் நம்பி, நாரையூர் பொல்லாப் பிள்ளையார் துணையால், வெளிக் கொண்டுவர உதவினார் என்பர். அவ் விநாயகர் திருவுருவே அவர் அன்புடன் மனத்திற்கண் மாசிலாது வழிபடும் தெய்வமாக இருந்தது. நம்பியின் வேண்டுகோளுக்கு இணங்க, பிள்ளையாரே நேரில் எழுந்தருளி ஞானகுருவாக விளங்கினார் என்பது வரலாறு.

**2. அவ்வையார்**

அவ்வைப் பிராட்டியார் அருளிய விநாயகர் அகவலைப் பெரும்பாலோர் நாளும் ஓதி வழிபடுவர். அப்பாடலில் விநாயகப் பெருமானே தனக்குக் குருவாக எழுந்தருளி அருள் புரிய வேண்டுமென்று வேண்டிக் கொள்கிறார். அவன் அருளால் இன்பநிலை எய்தினார் என்பது வரலாறு. விநாயகர் அகவலின் அப்பகுதி:

''தாயாய் எனக்குத் தான் எழுந்தருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்து
திருந்திய முதல் ஐந்தெழுத்தும் தெளிவாய்
பொருந்தவே வந்து என் உளந்தனில் புகுந்து

குருவடி வாகிக் குவலயம் தன்னில்
திருவடி வைத்துத் திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்தெனக்கு அருளி
கோடாயுதத்தால் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டி என்செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டித்
------------------------------------
தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே''

**3. அருணகிரி நாதர்**

கந்தர் அநுபூதியில் அருணகிரிநாதர் முருகனையே குருவாக வந்து அருளவேண்டும் என்று வேண்டிக் கொள்கிறார்.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.



# தீக்கை மட்டுமே வீடு தருமா?




அருள்நந்தியார், சிவஞானபோதம் அருளிய மெய்கண்ட தேவரின் பிரதான சீடராவார் அவர் போதத்திற்கு அருளிய விரிவான விளக்கமே **சிவஞான சித்தியார்.**

அந்நூலில் சூத்திரம் 8 — அதிகாரம் 2 —ல் 27ம் பாடல்:

''ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்ல ஆகமஞ் சொல்ல அல்லவாம் என்னும்
ஊனத்தார் என்கடவர் அஞ்ஞா னத்தால்
உறுவதுதான் பந்தம் உயர் மெய்ஞ்ஞானந்தான்
ஆனத்தால் அது போவதலர் கதிர் முன் இருள்போல்
அஞ்ஞானம் விடப் பந்தம் அறும் முத்தியாகும்
ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம்
இறைவனடி ஞானமே ஞானம் என்பர்''

இதற்கு, பொழிப்புரை எழுதிய மாதவ சிவஞானமுனிவர் ''அல்லவாம் என்னும் ஊனத்தார் என்கடவா'' என்பதற்கு

''வீடு பேற்றிற்குத் தீக்கை மாத்திரமே
அமையும், ஐவகை வேள்வி முதலிய
கன்மங்களே அமையும் என்று
பிதற்றுவோர் பேதைகள்'' என்று விளக்கம் கூறியுள்ளார்.

# சைவத்தின் சமரசம்

## தோத்திர — சாத்திர மேற்கோள்

**1. காரைக்கால் அம்மையார்:**

இவர் சைவக்குரவர் நால்வருக்கும் முந்தியவர். விரும்பியே பேய் உருவம் பெற்றுத் திருக்கைலாயம் சென்றவர். தாயும் தந்தையும் இல்லானாகிய சிவபெருமானால் 'அன்னையே என்று அழைக்கும் பெரும்பேறு பெற்றவர்'. அவர் கீழ்க்கண்டவாறு அருளுகிறார்.

''நூலறிவு பேசி நுழைவிலா தார்திரிக,
நீல மணிமிடற்றான் நீர்மையே — மேலுவந்த(து)
எக்கோலத் தெவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத்(து) அவ்வுருவே ஆம்''

**— அற்புதத் திருவந்தாதி**

*(யார் எந்த முறையில் எத்தெய்வத்தை வணங்கினாலும் அத்தெய்வம் சிவபெருமானே என்று எண்ணும் மனமுடையவர்களாக வாழவேண்டுமென்பதே சைவசித்தாந்தக் கொள்கை)*

**2. சேரமான் பெருமான்:**

இதே கருத்தைச் சேரமான் பெருமான் தம் 'திருக்கைலாய ஞானஉலா'வில் சிவபெருமான் முன்னிலையிலேயே கூறியுள்ளார்

''அரியாகிக் காப்பான் அயனாய்ப் படைப்பான்
அரனாய் அழிப்பனும் தானே — பரனாய
தேவர் அறியாத தோற்றத்தான் தேவரைத்தான்
மேவியவாறே விதித்த மைத்தான் — ஓவாதே
எவ்வுருவில் யாரொருவர் உள்குவார் உள்ளத்துள்
அவ்வுருவாய்த் தோன்றி அருள்கொடுப்பான் — எவ்வுருவும்
தானேயாய் நின்றளிப்பான் தன்னிற் பிறிதுருவம்
ஏனோர்க்குங் காண்பரிய எம்பெருமான்''

**— 11ஆம் திருமுறை**

*(எல்லாத் தெய்வ உருவிலும் சிவன் இருப்பான் என்றும், சிவன் உருவில் வேறு தெய்வங்கள் இருக்காதென்றும் அருளுகிறார்)*

**3. சிவஞான சித்தியார்:**

அருள்நந்தியார் தாம் அருளிய சிவஞான சித்தியார் சுபக்கத்தின் மங்கல வாழ்த்தில் சிவபெருமானை இவ்வாறு அறிமுகப்படுத்துகின்றார்

''அறுவகைச் சமயத்தோர்க்கும்
அவ்வவர் பொருளாய், வேறாய்
குறியது உடைத்தாய்

மேலும் பிரமாணவியலில் இவ்வாறு கூறியுள்ளதையும் மனத்தில் கொள்வோம்.

''குறித்தது ஒன்றாக மாட்டாக்
குறைவிலன் ஆதலானும்
நெறிப்பட நிறைந்த ஞானத்
தொழிலுடை நிலைமை யானும்
வெறுப்பொடு விருப்பும் தன்பால்
மேவுதல் இலாமை யானும்
நிறுத்திடும் நினைத்த மேனி
நின்மலன் அருளி னாலே.''

**4. திருமூலர்:**

ஆகமநூலாகிய திருமந்திரத்தில் திருமூலர் வேற்றுமை காண்பவர்களை இழித்துக் கூறுகிறார்.

ஒன்றது பேரூர் வழிஆறு அதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயை ஒத்தர்களே

— **திருமந்திரம் (1558)**

ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்
அத்தன் ஒருவனாம் என்பது அறிந்திலர்
அத்தன் ஒருவனாம் என்பது அறிந்திடின்
முத்தி விளைக்கும் முதல்வனு மாமே

— **திருமந்திரம் (2054)**

# சித்தாந்த சாத்திரங்கள் — 14 அருளியோரும் நூலும்

1. உய்ய வந்தார் — திருவுந்தியார்
   *(தி.பி. 1178)*
2. திருக்கடவூர் உய்ய வந்தார் — திருக்களிற்றுப் படியார்
   *(தி.பி. 1208)*
3. மெய்கண்டார் — சிவஞான போதம்
   *(தி.பி. 1263)*
4. அருள்நந்தி சிவாச்சாரியார் — சிவஞான சித்தியார்
   *(தி.பி. 1211 — 1306)*
5. இருபா இருபஃது
6. மனவாசகங்கடந்தார் — உண்மை விளக்கம்
   *(தி.பி. 1286)*
7. உமாபதி சிவாச்சாரியார் — சிவப்பிரகாசம்
   *(தி.பி. 1301 — 1346)*
8. திருவருட்பயன்
9. வினாவெண்பா
10. போற்றிப்பஃறொடை
11. கொடிக்கவி
12. நெஞ்சுவிடுதூது
13. உண்மைநெறி விளக்கம்
14. சங்கற்பநிராகரணம்

# சைவத் திருமுறைகள் 12
# அருளியோரும் — பாடலும்

1.2.3. **திருஞான சம்பந்தர் — திருக்கடைக்காப்பு**
(தி.பி. 671 — 687)

4.5.6. **திருநாவுக்கரசர் (அப்பர்) — தேவாரம்**
(தி.பி. 611 — 691)

7. **சுந்தரமூர்த்தியார் — திருப்பாட்டு**
(தி.பி. 731 — 749)

8. **மாணிக்கவாசகர் — திருவாசகம், திருக்கோவையார்**
(தி.பி. 3 ஆம் நூற்றாண்டு சிலர் 9 என்பர்)

9. திருமாளிகைத் தேவர் உள்ளிட்ட ஒன்மர் அருளியது: திருவிசைப்பா
(தி.பி 980 — 1075)
சேந்தனார் அருளியது — திருப்பல்லாண்டு

10. திருமூலர் — திருமந்திரம்
(தி.பி. 5ஆம் நூற்றாண்டு)

11. ஆலவாய் அண்ணல் உள்ளிட்ட பன்னிருவர் அருளியது — பதினோராம் திருமுறை
(தி.பி. 7 முதல் 10ஆம் நூற்றாண்டு முடிய)

12. சேக்கிழார் — திருத்தொண்டர்புராணம் என்ற — பெரியபுராணம்
(தி.பி. 1144 — 1181)



**"சொல்லும் பொருளெலாம் ஆனார்தாமே
தோத்திரமும் சாத்திரமும் ஆனார்தாமே"**

என்ற நாவுக்கரசர் வாக்கைத் தலைமேல் கொண்டு அவற்றை வணங்கி உய்வோமாக. புகழ் நூலாகிய பன்னிரு திருமுறை களும் பொருள் நூலாகிய பதினான்கு மெய்கண்ட சாத்திரங் களும் சைவ சமயத்திற்கேயுரிய சிறந்த இலக்கியச் செல்வங்கள்.

இலக்கியச் சிறப்பு, இசைநலம், கலைவளம், கற்பனைத் திறம், வரலாற்று உண்மை, இயற்கை புனைவு முதலியவற்றில் திகழும் திருமுறைகள். சாத்திரங்கள் வெறும் நம்பிக்கையை மட்டும் தழுவியதன்று, அஃது இக்கால அறிவியல் ஆய்வு நெறிகளுக்கும் இயைந்து விளங்குவன

அப்பனை நந்தியை ஆரா அமுதினை
ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை
எப்பரி சாயினும் ஏத்துமின்; ஏத்தினால்
அப்பரிசு ஈசன் அருள் பெறலாமே

**— திருமந்திரம் (36)**

உ

சிவமயம்

# திருவாசகம்

## திருப்பெருந்துறையில் அருளியது

## 1. சிவபுராணம்

திருச்சிற்றம்பலம்



கலிவெண்பா

(சிவனது அநாதி முறைமையான பழமை)

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள் வாழ்க
ஆகமம் ஆகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவ னடிவாழ்க 5

வேகங் கெடுத்தாண்ட வேந்த னடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க

கரங்குவிவார் உள்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க 10

ஈச னடிபோற்றி யெந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவ னடிபோற்றி 15

ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்யான் 20

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன் 25

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள் 30

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே 35

வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே 40

ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே 45

கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை 50

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழுஅழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய 55

விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத் 60

தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப் 65

பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கியென் ஆருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமும் இல்லானே உள்ளானே 70

அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே

ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார்
தங்கருத்தின் 75

நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய் 80

மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் ஐயா அரனேயோ என்றென்று 85

போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே 90

அல்லற் பிறவி அறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து. 95

*திருச்சிற்றம்பலம்*



உ

*சிவமயம்*

# பஞ்ச புராணம்

நாள்தொறும் சைவப் பன்னிரு திருமுறைகளை ஒருவர் ஓதுவது இயலாதசெயல் என்பதைச் சான்றோர் உணர்ந் தனர்.

அதனால் அவற்றுள் சில பகுதிகளைத் தேர்ந்தெடுத்து அவற்றை மட்டும் ஓதுவதின்மூலம் திருமுறைகள் முற்றும் ஓதிய பயன்கிட்டும் என்பதை அநுபவத்தில் கண்டனர்.

அத்தொகுதியே **பஞ்சபுராணம்** என்பது.

திருமுறையில் **கீழ்க்கண்ட ஐந்து பகுதிகள்** பஞ்சபுராணத்தில் இடம் பெற்றுள்ளன.

1. **தேவாரம்**
   (திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தர மூர்த்தி நாயனார் ஆகிய மூவர் அருளியது)
2. **திருவாசகம், திருக்கோவையார்**
   (மாணிக்கவாசகர் அருளியது)
3. **திருவிசைப்பா**
   (திருமாளிகைத் தேவர் உள்ளிட்ட ஒன்பதின்மர் அருளியது)
4. **திருப்பல்லாண்டு**
   (சேந்தனார் அருளியது)
5. **திருத்தொண்டர்புராணம் (பெரிய புராணம்)**
   (சேக்கிழார் அருளியது)

இவற்றுள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு திருப்பாடல் வீதம் ஐந்து பாடல்களை ஓதுதலே **பஞ்சபுராணம் ஓதுதல்** என் பது மரபு. திருக்கோயில்களில் ஆறுகால பூசைகளில் ‘பஞ்ச புராணம்’ முக்கியமாக இடம் பெற வேண்டும்.

# பஞ்ச புராணம்

## திருப்பாடல்களில் சில பாடல்கள்

## 1. தேவாரம்

### திருஞானசம்பந்தர் அருளியது

*திருச்சிற்றம்பலம்*



*பண்: பழந்தக்க ராகம்*

மெய்யராகிப் பொய்யைநீக்கி வேதனையைத் துறந்து
செய்யரானார் சிந்தையானே! தேவர் குலக் கொழுந்தே!
நைவன் நாயேன் உன்தன் நாமம் நாளும் நவிற்றுகின்றேன்
வையம்முன்னே வந்து நல்காய் வலிவல மேயவனே! 1

*பண்: கௌசிகம்*

குற்றம்நீ, குணங்கள்நீ, கூடலால வாயிலாய்!
சுற்றம்நீ, பிரானும்நீ, தொடர்ந்து இலங்கு சோதி நீ,

கற்ற நூல் கருத்தும்நீ, அருத்தம், இன்பம் என்றிவை
முற்றும்நீ, புகழ்ந்து முன்உரைப்பது என் முகம்மனே! 2

*பண்: சாதாரி*

மருந்தவை, மந்திரம், மறுமை,
நன்னெறியவை மற்றும் எல்லாம்
அருந்துயர் கெடும், அவர் நாமமே
சிந்தைசெய் நன்னெஞ்சமே!
பொருந்து தண்புறவினில் கொன்றை
பொன் சொரிதரத் துன்று பைம்பூஞ்
செருந்தி செம்பொன் மலர்
திருநெல்வேலியுறை செல்வர்தாமே! 3

*பண்: நட்டபாடை*

குற்றம் அறுத்தார், குணத்தின் உள்ளார்,
கும்பிடுவார் தமக்கு அன்பு செய்வார்,
ஒற்றை விடையினர், நெற்றிக் கண்ணார்
உறை பதியாகும் செறிகொள் மாடம்
சுற்றிய வாசலின் மாதர் விழாச்
சொற்கவிபாட நிதானம் நல்கப்
பற்றிய கையினர் வாழும் ஆவூர்
பசுபதியீச்சரம் பாடுநாவே! 4

*பண்: நட்டராகம்*

பெண் ஓர் பாகத்தர், பிறைதவழ் சடையினர்,
அறைகழல் சிலம்பு ஆர்க்கச்
சுண்ண மாதரித்து ஆடுவர், பாடுவர்
அகந்தொறும் இடுபிச்சைக்கு
உண்ணல் ஆவதோர் இச்சையின்
உழல்பவர், உயர்தரு மாதோட்டத்து
அண்ணல் நண்ணு கேதீச்சரம் அடைபவர்க்கு
அருவினை அடையாவே! 5

*திருச்சிற்றம்பலம்*

# திருநாவுக்கரசர் அருளியது

*திருச்சிற்றம்பலம்*



## திருத்தாண்டகம்

ஒன்றா உலகு அனைத்தும் ஆனார் தாமே,
ஊழிதோறூழி உயர்ந்தார் தாமே,
நின்றாகி எங்கும் நிமிர்ந்தார் தாமே,
நீர் வளி தீ ஆகாசம் ஆனார் தாமே,
கொன்றாடும் கூற்றை உதைத்தார் தாமே,
கோலப்பழனை உடையார் தாமே,
சென்று ஆடும் தீர்த்தங்கள் ஆனார் தாமே,
திருவாலங்காடு உறையும் செல்வர் தாமே. 1

எல்லா உலகமும் ஆனாய் நீயே,
ஏகம்பமேவி இருந்தாய் நீயே,
நல்லாரை நன்மை அறிவாய் நீயே,
ஞானச்சுடர் விளக்காய் நின்றாய் நீயே,
பொல்லா வினைகள் அறுப்பாய் நீயே,
புகழ்ச் சேவடி என்மேல் வைத்தாய் நீயே,

செல்வாய செல்வம் தருவாய் நீயே,
திருவையாறு அகலாத செம்பொற் சோதீ! 2

பண்: காந்தாரம்

நீறுமெய் பூசவல்லானும்,
நினைப்பவர் நெஞ்சத்து உள்ளானும்,
ஏறு உகந்து ஏற வல்லானும்,
எரிபுரை மேனியினானும்,
நாறு கரந்தையினானும்,
நான்மறைக் கண்டத்தினானும்,
ஆறு சடைக்கரந்தானும்
ஆரூர்அமர்ந்த அம்மானே! 3

## திருநேரிசை

அங்கத்தை மண்ணுக் காக்கி,
ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப்
பாவித்தேன் பரமா நின்னைச்!
சங்கொத்த மேனிச் செல்வா
சாதனாள் நாயேன் உன்னை
எங்குற்றாய் என்ற போது
ஆ! இங்குற்றேன் என் கண்டாயே! 4

## திருவிருத்தம்

படைக்கலமாக உன்நாமத்து எழுத்து
அஞ்சு என் நாவிற்கொண்டேன்
இடைக்கலம் அல்லேன் எழுபிறப்பும்
உனக்கு ஆட்செய்கின்றேன்,
துடைக்கினும் போகேன், தொழுது
வணங்கித் தூநீறு அணிந்து உன்
அடைக்கலம் கண்டாய் அணிதில்லைச்
சிற்றம்பலத்து அரனே! 5

*திருச்சிற்றம்பலம்*

# சுந்தரமூர்த்தி நாயனார் அருளியது

திருச்சிற்றம்பலம்



பண்: தக்கேசி

**குறை**விலா நிறைவே! குணக் குன்றே!
கூத்தனே! குழைக் காது உடையானே!
உறவிலேன் உனையன்றி மற்றறியேன்
ஒரு பிழை பொறுத்தால் இழிவுண்டோ!
சிறைவண்டு ஆர்பொழில் சூழ் திருவாரூர்ச்
செம்பொன்னே! திருவாவடுதுறை யுள்
அறவனே எனை அஞ்சேல் என்று அருள்வாய்!
ஆர் எனக்கு உறவு அமரர்கள் ஏறே! 1

பண்: நட்டராகம்

எங்கேனும் இருந்து உன்அடியேன் உனை நினைந்தால்
அங்கே வந்து என்னோடும் உடனாகி நின்று அருளி
இங்கே என்வினையை அறுத்திட்டு எனை ஆளும்
கங்கா நாயகனே! கழிப்பாலை மேயானே! 2

பொன்னார் மேனியனே புலித்தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை அணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே
அன்னே! உன்னை யல்லால் இனியாரை நினைக்கேனே. 3

பண்: இந்தளம்

ஈழநாட்டு மாதோட்டம், தென்னாட்டு இராமேச்சுரம்,
சோழநாட்டுத் துருத்தி, நெய்த்தானம், திருமலை
ஆழியூரென நாட்டுக்கெல்லாம் மணியாகிய
கீழையில் அரனார்க்கு இடம் கிள்ளி குடியதே. 4

பண்: கொல்லிக் கௌவானம்

வேயன தோளி மலை மகளை விரும்பிய
மாயமில் மாமலை நாடனாகிய மாண்பனை
ஆயன சொல்லி நின்றார்கள் அல்லல்அறுக்கிலும்
'பேயனே பித்தனே' என்பரால் எம்பிரானையே! 5

*திருச்சிற்றம்பலம்*

# 2. திருவாசகம் - திருக்கோவையார்

## திருவாசகம்

*திருச்சிற்றம்பலம்*



### மெய்யுணர்தல்

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து
　　உன்விரைஆர் கழற்கு, என்
கைதான் தலை வைத்துக்
　　கண்ணீர் ததும்பி, வெதும்பி, உள்ளம்
பொய்தான் தவிர்ந்து, உன்னைப்
　　போற்றி சயசய போற்றி என்னும்
கைதான் நெகிழவிடேன்
　　உடையாய் என்னைக் கண்டு கொள்ளே! 1

### ஆனந்தா தீதம்

அப்பனே, எனக்கு அமுதனே,
　　ஆனந்தனே, அகம்நெக அள்ளூறுதேன்
ஒப்பனே, உனக்கு உரிய அன்பரில்
　　உரியனாய், உனைப் பருக நின்றது ஓர்

துப்பனே, சுடர்முடியனே, துணையாளனே,
தொழும்பாளர் எய்ப்பினில்
வைப்பனே, எனை வைப்பதோ, சொலாய்
நைய, வையகத்து, எங்கள் மன்னனே? 2

**திருஅம்மானை**

பண் சுமந்த பாடல் பரிசு படைத்தருளும்
பெண் சுமந்த பாகத்தன், பெம்மான், பெருந்துறையான்,
விண் சுமந்த கீர்த்தி வியன் மண்டலத்து ஈசன்
கண் சுமந்த நெற்றிக்கடவுள், கலி மதுரை
மண் சுமந்த கூலி கொண்டு, அக் கோவால் மொத்துண்டு
புண் சுமந்த பொன் மேனி-பாடுதும் காண்; அம்மானாய். 3

**குழைத்த பத்து**

வேண்டத் தக்கது அறிவோய் நீ!
வேண்ட முழுதும் தருவோய் நீ!
வேண்டும் அயன், மாற்கு, அரியோய் நீ!
வேண்டி என்னைப் பணி கொண்டாய்;
வேண்டி, நீயாது அருள் செய்தாய்
யானும் அதுவே வேண்டின் அல்லால்,
வேண்டும் பரிசு ஒன்று உண்டு என்னில்
அதுவும் உன்தன் விருப்பு அன்றே! 4

**திருக்கோவையார்**

ஆனந்த வெள்ளத்து அழுந்துமோர்
ஆருயிர் ஈருருக் கொண்டு
ஆனந்த வெள்ளத்திடைத் திளைத்
தால் ஒக்கும் அம்பலம் சேர்
ஆனந்த வெள்ளத்து அறை கழலோன்
அருள் பெற்ற வரின்
ஆனந்த வெள்ளம் வற்றாது
முற்றாது இவ் அணிநலமே! 5

*திருச்சிற்றம்பலம்*

# 3. திருவிசைப்பா

*திருச்சிற்றம்பலம்*

பண்: பஞ்சமம்

ஒளிவளர் விளக்கே, உலப்பிலா ஒன்றே,
　　உணர்வு சூழ் கடந்ததோர் உணர்வே,
தெளிவளர் பளிங்கின் திரள் மணிக்குன்றே
　　சித்தத்துள் தித்திக்கும் தேனே
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே
　　அம்பலம் ஆடு அரங்காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
　　தொண்டனேன் விளம்புமா விளம்பே! 1

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
　　கரையிலாக் கருணை மாகடலை,
மற்றவர் அறியா மாணிக்க மலையை
　　மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றவெஞ் சிவனைத்
　　திருவீழிமிழலை வீற்றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண்டு உள்ளம்
　　குளிர என் கண் குளிர்ந்தனவே! 2

கண் பனி அரும்பக் கைகள் மொட்டித்து என்
　　களை கணே ஓலம் என்று ஓலிட்டு
என்பெலாம் உருகும் அன்பர் தம் கூட்டத்து
　　என்னையும் புணர்ப்பவன் கோயில்
பண்பல தெளிதேன் பாடிநின்று ஆடப்
　　பனிமலர்ச் சோலை சூழ் மொழுப்பின்
செண்பகம் அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
　　திருவளர் திருச்சிற்றம்பலமே. 3

சித்தனே அருளாய், செங்கணா அருளாய்!
சிவபுர நகருள் வீற்றிருந்த
அத்தனே, அருளாய்! அமரனே அருளாய்!
அமரர்கள் அதிபனே, அருளாய்!
தத்து நீர்ப் படுகர்த் தண்டலைச் சூழல்
சாட்டியக் குடியுள் ஏழிருக்கை
முத்தனே அருளாய்! முதல்வனே அருளாய்!
முன்னவா, துயர்கெடுத்து எனக்கே! 4

செங்கணா போற்றி! திசைமுகா போற்றி!
சிவபுர நகருள் வீற்றிருந்த
அங்கணா போற்றி! அமரனே போற்றி!
அமரர்கள் தலைவனே போற்றி!
தங்கள் நான்மறை நூல் சகலமும் கற்றோர்
சாட்டியக்குடி இருந்து அருளும்
எங்கள் நாயகனே போற்றி! ஏழிருக்கை
இறைவனே போற்றியே போற்றி. 5

*திருச்சிற்றம்பலம்*

## 4. திருப்பல்லாண்டு

*திருச்சிற்றம்பலம்*

பண்: பஞ்சமம்

மன்னுக தில்லை, வளர்க நம்
பக்தர்கள், வஞ்சகர்போய் அகலப்
பொன்னின் செய்மண்டபத்து உள்ளே
புகுந்து புவனி எல்லாம் விளங்க
அன்ன நடை மடவாள் உமை
கோன் அடியோ முக்கு அருள் புரிந்து
பின்னைப் பிறவி அறுக்க நெறிதந்த
பித்தற்குப் பல்லாண்டு கூறுதுமே. 1

சொல்லாண்ட சுருதிப்பொருள்
　　சோதித்த தூய்மனத் தொண்டர் உள்ளீர்
சில்லாண்டில் சிதையும் சில
　　தேவர் சிறுநெறி சேராமே
வில்லாண்ட கனகத் திரள்
　　மேரு விடங்கன் விடைப்பாகன்
பல்லாண்டு என்னும் பதம் கடந்
　　தானுக்கே பல்லாண்டு கூறுதுமே! 2

பாலுக்குப் பாலகன் வேண்டி
　　அழுதிடப் பாற்கடல் ஈந்த பிரான்
மாலுக்குச் சக்கரம் அன்று அருள்
　　செய்தவன், மன்னிய தில்லை தன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற
　　சிற்றம்பலமே இடமாகப்
பாலித்து நட்டம் பயிலவல்
　　லானுக்கே பல்லாண்டு கூறுதுமே! 3

தாதையைத் தாள் அற வீசிய
　　சண்டிக்கு இவ் அண்டத்தொடு உடனே
பூதலத்தோரும் வணங்கப் பொற்
　　கோயிலும் போனகமும் அருளிச்
சோதி மணிமுடித் தாமமும்
　　நாமமும் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத்துக்குப் பரிசுவைத்
　　தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. 4

குழல் ஒலி, யாழ் ஒலி, கூத்து ஒலி
　　ஏத்து ஒலி, எங்கும் குழாம் பெருகி
விழல் ஒலி விண்ணளவும் சென்று
　　விம்மி மிகு திருவாரூரின்
மழவிடையார்க்கு வழிவழி
　　யாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த
பழஅடியா ரோடும் கூடி எம்
　　மானுக்கே பல்லாண்டு கூறுதுமே! 5

திருச்சிற்றம்பலம்

# 5. திருத்தொண்டர் புராணம்

## (பெரிய புராணம்)

*திருச்சிற்றம்பலம்*

பூவின் நாயகன் பூமகள் நாயகன்
காவின் நாயகன் ஆதிக் கடவுளர்க்கு
ஆவி நாயக்ன் அங்கயற்கண்ணி மா
தேவி நாயகன் சேவடி ஏத்துவாம். 1

அண்ணலே! எனை ஆண்டுகொண்டு அருளிய அமுதே!
விண்ணிலே மறைந்து அருள்புரி வேதநாயகனே!
கண்ணினால் திருக் கயிலையில் இருந்த நின் கோலம்
நண்ணி நான் தொழ நயந்து அருள்புரி எனப் பணிந்தார் 2

ஆதியாய் நடுவும் ஆகி, அளவிலா அளவும் ஆகி
சோதியாய் உணர்வும்ஆகித், தோன்றிய பொருளும் ஆகிப்,
பேதியா ஏகம்ஆகிப், பெண்ணுமாய் ஆணும் ஆகிப்,
போதியா நிற்கும் தில்லை பொதுநடம் போற்றி! போற்றி! 3

செய் வினையும், செய்வானும்,
அதன் பயனும் சேர்ப்பானும்
மெய் வகையாய் நான்காகும்
விதித்த பொருள் எனக் கொண்டே
இவ்வியல்பு சைவநெறி
அல்லவற்றுக்கு இல்லை யென
உய்வகையாற் பொருள் சிவன் என்று
அருளாலே உணர்ந்து அறிந்தார் 4

மண்ணினில் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்
கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்,
உண்மையாம் மெனின் உலகர்முன் வருக என உரைப்பார். 5

*திருச்சிற்றம்பலம்*

உ

சிவமயம்

# தோத்திரத் திரட்டு

# வழிபாட்டுத் திருப்பாடல்கள்

*திருச்சிற்றம்பலம்*

## 1. விநாயகர் துதி

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவர்இடர்
கடி கணபதி வர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில் வலிவலம் உறை இறையே 1

வானுலகும் மண்ணுலகும் வாழ மறைவாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமதம் ஐந்துகரம் மூன்றுவிழி நால்வாய்
யானைமுகனைப் பரவி அஞ்சலி செய்கிற்பாம் 2

திருவும் கல்வியுஞ் சீரும் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவமாய் நமதுஉள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவாம் 3

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாது சார்வார் தமக்கு 4

பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும்இவை
நாலும் கலந்து உனக்கு நான்தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீஎனக்குச்
சங்கத் தமிழ்மூன்றும் தா 5

*திருச்சிற்றம்பலம்*

## 2. முருகப்பெருமான் துதி

பத்தியால் யானுனைப் பலகாலும்
 பற்றியே மாதிருப் புகழ்பாடி
முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்
 முத்தியே சேர்வதற் கருள்வாயே
உத்தமா தானசற் குணர்நேயா
 ஒப்பிலா மாமணிக் கிரிவாசா
வித்தகா ஞானசத் தினிபாதா
 வெற்றிவேலாயுதப் பெருமாளே 1

— *திருப்புகழ்*

வானோ புனல் பார்கனல் மாருதமோ
ஞானோதயமோ நவில் நான்மறையோ
யானோ மனமோ எனைஆண்ட இடம்
தானோ பொருளாவது சண்முகனே! 2

முருகன் குமரன் குகன்என்று மொழிந்து
உருகும் செயல்தந்து உணர்என்று அருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவும்
குருபுங்கவ! எண்குண பஞ்சரனே! 3

என்தாயும் எனக்கு அருள் தந்தையும்நீ
சிந்தாகுல மானவை தீர்த்து எனைஆள்
கந்தா! கதிர் வேலவனே! உமையாள்
மைந்தா! குமரா! மறை நாயகனே! 4

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே! 5

— *கந்தரநுபூதி*

மொய்தார் அணிகுழல் வள்ளியை
 வேட்டவன், முத்தமிழால்
வைதாரையும் அங்கு வாழவைப்போன்,
 வெய்ய வாரணம்போல்

கைதான் இருபது உடையான்
 தலைபத்தும் கத்தரிக்க
எய்தான் மருகன், உமையாள்
 பயந்த இலஞ்சியமே! 6

தெய்வத் திருமலைச் செங்கோட்டில்
 வாழுஞ் செழுஞ்சுடரே
வைவைத்த வேற்படை வானவனே!
 மறவேன் உனைநான்
ஐவர்க்கு இடம்பெறக் காலிரண்டு
 ஓட்டி அதில் இரண்டு
கைவைத்த வீடு குலையு முன்னே
 வந்து காத்தருளே! 7

நாள் என்செயும் வினைதான் என்செயும் எனைநாடி வந்த
கோள் என்செயும் கொடுங்கூற்று என்செயும் குமரேசர் இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் ச்ண்முகமும்
தோளும் கடம்பும் என்முன்னே வந்து தோன்றிடினே. 8

பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித்து இருக்கும் அமுது கண்டேன் செயன்மாண்டு அடங்கப்
புத்திக் கமலத்து உருகிப் பெருகிப் புவனம் எற்றித்
தத்திக் கரைபுரளும் பரமாநந்த சாகரத்தே! 9

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
 வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்
 விரித்தோனை விளங்கு வள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
 கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போதும் மறவா
 தவர்க்கு ஒரு தாழ்வில்லையே! 10

சூலம் பிடித்து எமபாசம் சுழற்றித் தொடர்ந்து வரும்
காலன் தனக்கு ஒருகாலும் அஞ்சேன், கடல்மீது எழுந்த
ஆலம் குடித்த பெருமான் குமாரன் அறுமுகவன்
வேலும் திருக்கையும் உண்டே நமக்கு ஒரு மெய்த்துணையே. 11

— *கந்தரலங்காரம்*

ஆறிருதடந்தோள் வாழ்க! அறுமுகம் வாழ்க! வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க! குக்குடம் வாழ்க! செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க! யானைதன் அணங்கு வாழ்க!
மாறிலா வள்ளி வாழ்க! வாழ்க சீரடியார் எல்லாம். 12

*திருச்சிற்றம்பலம்*

## 3. சிவபெருமான் துதி

**திருஞானசம்பந்தர்:** *பண்: நட்டராகம்*

என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே
இருங்கடல் வையத்து
முன்னை நீபுரி நல்வினைப் பயனிடை
முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரிசூழ் திருவலஞ்சுழி
வாணனை வாயாரப்
பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும்
வழிபடும் அதனாலே. 1

*பண்: வியாழக்குறிஞ்சி*

காவினை இட்டும் குளம்பல தொட்டும்
கனி மனத்தால்
ஏவினையால் எயில் மூன்று எரித்தீர்
என்று இருபொழுதும்
பூவினைக் கொய்து மலரடி
போற்றுதும் நாமடியோம்
தீவினை வந்து எமைத்
தீண்டப்பெறா திருநீலகண்டம். 2

**திருநாவுக்கரசர்:** தனித்திருக்குறுந்தொகை

விறகில் தீயினன் பாலில் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன்நிற்குமே. 3

திருத்தாண்டகம்

இடர்கெடுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
    ஈண்டு ஒளிசேர் கங்கைச் சடையாய் என்றும்
சுடர்ஒளியாய் உள்விளங்கு சோதீ என்றும்
    தூநீறு சேர்ந்திலங்கு தோளா என்றும்
கடல்விடம்அது உண்டு இருண்ட கண்டா என்றும்
    கலைமான் மறி ஏந்துகையா என்றும்
அடல்விடையாய் ஆரமுதே ஆதி என்றும்
    ஆரூரா என்றென்றே அலறா நில்லே. 3

**சுந்தரர்:** பண்: கொல்லிக்கௌவாணம்

வேயன தோளி மலைமகளை விரும்பிய
மாயமில் மாமலை நாடனாகிய மாண்பனை
ஆயன சொல்லி நின்றார்கள் அல்லல் அறுக்கிலும்
பேயனே பித்தனே என்பரால் எம்பிரானையே 5

பண்: தக்கேசி

பேரோர் ஆயிரமும் உடையானை
    பேசினால் பெரிதும் இனியானை
நீரூர் வார்சடை நின்மலன் தன்னை
    நீடூர் நின்று உகந்திட்ட பிரானை
ஆரூரன் அடிகாண்பதற்கு அன்பாய்
    ஆதரித்து அழைத் திட்ட இம்மாலை
பாரூரும் பரவித்தொழ வல்லார்
    பத்தராய் முத்திதாம் பெறுவாரே. 6

**மாணிக்கவாசகர்:** திருவாசகம்

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான்எனது என்று அவரவரைக் கூத்தாட்டு
வான்ஆகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே. 7

யானேபொய் என்நெஞ்சம் பொய்என் அன்பும்பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே
தேனே அமுதே கரும்பின் தெளிவே தித்திக்கும்
மானே அருளாய் அடியேன் உனைவந்(து) உறுமாறே. 8

*திருச்சிற்றம்பலம்*

## 4. உமாதேவியார் துதி

**திருவிளையாடல்:**

செழியர்பிரான் திருமகளாய்க் கலைபயின்று,
முடிபுனைந்து, செங்கோ லோச்சி,
முழுது உலகும் சயங்கொண்டு, திறைகொண்டு,
நந்திகண முனைப்போர் சாய்த்து,
தொழு கணவற்கு அணிமண மாலிகை சூட்டி,
தன்மகுடம் சூட்டிச் செல்வம்
தழைவுறு தன்அரசளித்த பெண்ணரசி
அடிக்கமலம் தலைமேல் வைப்பாம். 1

**அபிராமி அந்தாதி:**

நன்றே வருகினும் தீதேவிளைகினும் நான்அறிவது
ஒன்றேயும் இல்லை,உனக்கேபரம், எனக்கு உள்ள எல்லாம்
அன்றே உனதென்று அளித்துவிட்டேன், அழியாதகுணக்
குன்றே! அருட்கடலே! இமவான் பெற்ற கோமளமே! 2

*திருச்சிற்றம்பலம்*

## 5. தில்லை நடராசர் துதி

**அப்பர்:** *திருநேரிசை*

பத்தனாய்ப் பாடமாட்டேன் பரமனே பரமயோகி
எத்தினாற் பத்திசெய்வேன் என்னைநீ இகழவேண்டாம்
முத்தனே முதல்வா தில்லை அம்பலத்து ஆடுகின்ற
அத்தா! உன் ஆடல்காண்பான் அடியனேன் வந்தவாறே! 1

*திருக்குறுந்தொகை*

அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொண்தம்தான் என்செயும்
தில்லை மாநகர் சிற்றம்பல வனார்க்கு
எல்லை இல்லதோர் அடிமை பூண்டேனுக்கே! 2

*திருச்சிற்றம்பலம்*

## 6. கலைமகள் துதி

வெண்தாமரைக்கு அன்றி நின்பதம் தாங்க
வெள்ளை உள்ளத்
தண்தாமரைக்குத் தகாது கொலோ!
சகம் ஏழும் அளித்து
உண்டான் உறங்க, ஒழித்தான் பித்தாக
உண்டாக்கும் வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே
சகலகலா வல்லியே! 1

*திருச்சிற்றம்பலம்*

## 7. திருமகள் துதி

மகா இலக்குமி மலரடி போற்றி
பாக்கிய இலக்குமி பதமலர் போற்றி
விசய இலக்குமி விறைகழல் போற்றி
சுந்தர இலக்குமி திருவடி போற்றி
திருமகள் தாமரைத் திருப்பதம் போற்றி 1

*திருச்சிற்றம்பலம்*

## 8. தட்சணாமூர்த்தி துதி

கல்லாலின் புடையமர்ந்து நான்மறை
ஆறங்கமுதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வரும் வாக்குஇறந்த
பூரணமாய், மறைக்கு அப்பாலாய்,
எல்லாமாய், அல்லதுமாய், இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவரை நினையாமல்
நினைந்து பவத்தொடக்கை வெல்வாம். 1

— *திருவிளையாடல்*

*திருச்சிற்றம்பலம்*

## 9. சண்டேசுரா துதி

பொன்னங் கடுக்கை முடிவேய்ந்த
புனிதற்கு அமைக்கும் பொருளன்றி
மின்னும் கலன்ஆடைகள் பிறவும்
வேறு தனக்கென்று அமையாமே
மன்னும் தலைவன் பூசனையில்
மங்கும் பயனை அடியார்கள்
துன்னும்படி பூசனை கொள்ளும்
தூயோன் அடித்தாமரை தொழுவாம்.

*திருச்சிற்றம்பலம்*

## 10. நவக்கிரகத்துதி

வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்து எனது
உளமே புகுந்த அதனால்

ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்வியாழன் வெள்ளி
சனி பாம்பு இரண்டும் உடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே. 1

— சம்பந்தர்

*திருச்சிற்றம்பலம்*

## 11. நால்வர் துதி

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்த பிரான் அடி போற்றி
வாழிதிருநாவலூர் வன்தொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாதவூரர் திருத்தாள் போற்றி.

*திருச்சிற்றம்பலம்*

## 12. மங்கலம்

ஆட லேற்றினான்
கூடல் ஆலவாய்
பாடியே மனம்
நாடி வாழ்மினே

— சம்பந்தர்

*திருச்சிற்றம்பலம்*



## பஞ்ச பூத கோவில்கள்

1. திருவாரூர் அல்லது காஞ்சீபுரம் (பிருதிவி) மண்
2. திருவண்ணாமலை (தேயு) தீ
3. திருவானைக்கா (அப்பு) நீர்
4. திருக்காளத்தி (வாயு) காற்று
5. சிதம்பரம் (ஆகாயம்) வெளி

## பஞ்ச சபைகள்

1. திருவாலங்காடு ... இரத்தின சபை
2. சிதம்பரம் ... கனக சபை
3. மதுரை ... ரஜித சபை
4. திருநெல்வேலி ... தாமிர சபை
5. திருக்குற்றாலம் ... சித்திர சபை

## தக்ஷிண கைலாசம்

1. திருக்காளத்தி
2. திருச்சிராப்பள்ளி
3. திருக்கோணமலை

## முக்தி தரும் கோவில்கள்

1. அயோத்தி
2. மதுரா
3. மாயா (பூரி)
4. காசி
5. காஞ்சி
6. அவந்திகா
7. துவாரகை

## எட்டு வீரட்டங்கள்

1. திருக்கண்டியூர் ... பிரமன் சிரங் கொய்தது
2. திருக்கோவலூர் ... அந்தகாசுரனைச் சங்கரித்தது
3. திருஅதிகை ... திரிபுரத்தை எரித்தது
4. திருப்பறியலூர் ... தக்கன் சிரங் கொய்தது
5. திருவிற்குடி ... சலந்தராசுரனைச் சங்கரித்தது
6. வழுவூர் (வைப்புத்தலம்) ... யானையை உரித்தது
7. திருக்குறுக்கை ... காமனை எரித்தது
8. திருக்கடவூர் ... யமனை உதைத்தது

## ஏழு விடங்கங்கள்

| | | |
|---|---|---|
| 1. திருவாரூர் | ... | வீதி விடங்கர் - அசபா நடனம் |
| 2. திருநள்ளாறு | ... | நகவிடங்கர் - உன்மத்த நடனம் |
| 3. திருநாகைக் காரோணம் | ... | சுந்தர விடங்கர் - பாராவார தரங்க நடனம், வீசி நடனம் |
| 4. திருக்காறாயில் | ... | ஆதி விடங்கர் - குக்குட நடனம் |
| 5. திருக்கோளிலி | ... | அவனி விடங்கர் - பிருங்க நடனம் |
| 6. திருவாய்மூர் | ... | நீல விடங்கர் - கமல நடனம் |
| 7. திருமறைக்காடு | ... | புவனிவிடங்கர் - ஹஸ்தபாத நடனம் |

## ஏழு ஸ்தான கோவில்கள்

1. திருவையாறு
2. திருப்பழனம்
3. திருச்சோற்றுத்துறை
4. திருவேதிகுடி
5. திருக்கண்டியூர்
6. திருப்பூந்துருத்தி
7. திருநெய்த்தானம்

## காசிக்குச் சமானமாகச் சொல்லப்படுவன

1. திருவெண்காடு
2. திருவையாறு
3. மயிலாடுதுறை
4. திருவிடைமருதூர்
5. திருச்சாய்க்காடு
6. திருவாஞ்சியம்

## தேவாரம் பாடல் பெற்ற கோவில்கள்

| | | |
|---|---|---|
| 1. மூவரும் பாடிய கோவில்கள் | ... | 44 |
| 2. சம்பந்தரும் அப்பரும் பாடியது | ... | 52 |
| 3. சம்பந்தரும் சுந்தரரும் பாடியது | ... | 13 |
| 4. அப்பரும் சுந்தரரும் பாடியது | ... | 2 |
| 5. சம்பந்தர் மாத்திரம் பாடியது | ... | 110 |
| 6. அப்பர் மாத்திரம் பாடியது | ... | 28 |
| 7. சுந்தரர் மாத்திரம் பாடியது | ... | 25 |
| ஆக பாடல் பெற்ற கோவில்கள் | | 274 |

---

7 திருமுறைகளிலும் பாடல் பெற்றுள்ள கோவில்கள் திருமறைக்காடு, காஞ்சீபுரம், திருவாரூர் ஆக மூன்று.

# சிவ சிவ

எழுத்திற்கெல் லாம்முத லாம்அகரம் போன்று
சமயங்களுக்குச் சைவம்.

சித்தாந்தத் தத்துவத்தில் ஆழ்ந்து மூழ்கிச்
சிந்தித்துத் தெளிந்தறிந்தே இன்பும் பெற்ற
சித்தாந்த வித்தகர்கள் அளித்த கனியாம்
சிவஞானப் பழந்தன்னைப் பிழிந்து பெற்ற
தித்திக்கும் தேனமுதாம் இச்சிறு தொகுப்பு;
சித்தாந்த சாத்திரங்கள் பதிநான் கினையும்
பத்தியுடன் படித்திடவோர் தூண்டு கோலாய்ப்
பலருக்கும் இதுஅமைய பரமன் அருள்கவே





அன்பே சிவம்